வியாழன் தோறும் CANADA EELAMURASU
# ஈழமுரசு
முரசு: 20 அக்டோபர் 25 - நவம்பர் 01, 2018 இதழ்: 143






# துவண்டு போகாத தமிழ் மக்களின் நீதிக்கான குரலாய் நிமிர்ந்து நின்ற



## விக்கேஸ்வரனின் ஐந்தாண்டுக் காலம்

## தமிழ் தேசிய உணர்வாளர்களை ஒன்றிணைக்க பாடுபடுவோம்

புதிய கட்சியை ஆரம்பித்த அனந்தி அறிவிப்பு



## தமிழர்களின் எந்த அபிலாஷையையும் ஏற்கப் பேரினவாதம் தயாராகவில்லை

- யாழ்.பல்கலைக்கழக சட்டபீடத் தலைவர் கு.குருபரன்




## கனேடியத் தமிழர் அறக்கட்டளையின்

வருடாந்த நிதி சேர்ப்பு இராப்போசனம்

ஒக்டோபர் 27, 2018

32ம் பக்கம் பார்க்கா







































ஈழமுரசு

# "விக்கி"யின் பிரகடனம்

நீண்டகாலமாக எதிர்பார்க்கப்பட்ட புதிய கட்சி தொடர்பான அறிவித்தலை சி.வி. விக்னேஸ்வரன் வெளியிட்டுள்ளார். யாழ்ப்பாணம், நல்லூரில் வைத்து பொது மக்களின் பலத்த ஆரவாரத்துக்கு மத்தியில் "தமிழ் மக்கள் கூட்டணி" என்ற பெயரில் புதிய கட்சி ஒன்றை ஆரம்பிக்கப்போவதாக விக்கினேஸ்வரன் அறிவித்தார். ஈழத் தமிழர்களின் பிரதான அரசியல் அணிகள் இரண்டாகச் செல்லப்போவதை இது தெளிவாக வெளிப்படுத்தியிருக்கின்றது. தமிழர்களின் எதிர்கால அரசியலை தமிழ்த் தேசியக் கூட்டமைப்பா அல்லது தமிழ் மக்கள் கூட்டணியா முன்னெடுக்கப்போகின்றது என்பதுதான் இப்போதுள்ள கேள்வி.

விக்கினேஸ்வரனின் எதிர்கால அரசியல் பாதை எவ்வாறானதாக இருக்கப்போகின்றது என்ற கேள்வி நீண்டகாலமாகவே எழுப்பப்பட்டுவந்தது. தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் சார்பில் பொது வேட்பாளராக - ஒரு கட்சி சாராத வேட்பாளராக களமிறங்கி முதலமைச்சர் பதவியைப் பெற்றுக்கொண்டவர்தான் விக்கினேஸ்வரன். முக்கியமான பல விடயங்களில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் முதன்மைப் பங்காளிக் கட்சியான தமிழரசுக் கட்சியின் தலைமையுடன் அவர் முரண்பட்டார். இந்த முரண்பாடுகள் தீவிரமடைந்து - இப்போது தனியான கட்சி ஒன்றை அமைத்து தனியான பாதையில் செல்ல வேண்டிய நிர்ப்பந்தத்தை விக்கினேஸ்வரனுக்கு ஏற்படுத்தியுள்ளது.

"தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் தலைமை, மக்கள் அவர்களுக்குக் கொடுத்த ஆணைப்படி செயற்பட்டிருந்தால் - அவர்கள் வரித்துக் கொண்டதாகக் கூறப்படும் கொள்கைகளுக்கு அவர்கள் விசுவாசமாக நடந்து கொண்டிருந்தால் - தான் அரசியலில் இருந்து ஓய்வு பெற்றுப் போயிருப்பார் என்றும் - ஒரு கட்சியை உருவாக்கக் கூட்டமைப்பினர் தன்னைக் கட்டாயப்படுத்தி விட்டார்கள்" என்றும் - நீதியரசர் விக்னேஸ்வரன் கூறியிருப்பது கவனத்துக்குரியது. அதாவது தனியாகச் செல்வது என்ற முடிவு தன்னுடைய முடிவு என்பதைவிடவும், அதற்கான நிர்ப்பந்தம் ஏற்பட்டதன் காரணமாகவே இந்த முடிவை தான் எடுக்கவேண்டியிருந்தாகவும் விக்கினேஸ்வரன் கூறியிருக்கின்றார்.

வடமாகாண சபையின் இறுதி அமர்வு இடம்பெற்ற செவ்வாய்கிழமையும், புதிய கட்சியை அவர் ஆரம்பித்த புதன்கிழமையும் அவர் நிகழ்த்திய உரைகள் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவை. முதலமைச்சர் பதவியை தான் எதற்காகப் பெற்றுக்கொண்டார் என்பதையும், அதன்பின்னர் தான் எதிர்கொண்ட பிரச்சினைகளையும் அவர் இந்த உரைகளில் தெளிவாக விளக்கியிருக்கின்றார். அவர் எதிர்கொண்ட பிரச்சினைகள் பல முனைகளில் இருந்துள்ளன. முதலாவது, அதிகாரங்களற்ற மாகாண சபையை வைத்துக்கொண்டு எதனையும் செய்ய முடியாது என்பது முதலாவது பிரச்சினை. மத்திய அரசால் ஆளுநரின் மூலமாகப் போடப்பட்ட தடைகள் இரண்டாவது. இந்த இரண்டும் எதிர்பார்க்கப்பட்டதுதான்.

ஆனால் எதிர்பார்க்கப்பட்ட இடத்திலிருந்து தேவையான ஆதரவு கிடைக்காததததுதான் அவர் எதிர்கொண்ட முக்கியமான பிரச்சினை என்பதை அவரே குறிப்பிடுகின்றார். தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் தலைமையிடமிருந்து அவர் எதிர்பார்த்த ஆதரவு அவருக்குக் கிடைக்கவில்லை. வடமாகாண சபைக்கான தேர்தலின் போது மக்கள் கொடுத்த ஆணைக்கு உட்பட்டுச் செயற்படுவதற்கு முதலமைச்சர் முற்பட்டார். பிரதான கோரிக்கைகளில் விட்டுக்கொடுப்புக்களுக்கு அவர் தயாராகவில்லை. ஆனால், கூட்டமைப்பின் தலைமை அரசாங்கத்தைப் பாதுகாப்பதற்காக பல விட்டுக்கொடுப்புக்களைச் செய்தார்கள். இதனை இராஜதந்திரம் எனவும் அவர்கள் குறிப்பிட்டார்கள். கூட்டமைப்பின் தலைமையின் இந்தப் போக்கை விக்கினேஸ்வரன் கடுமையாகச் சாடியுள்ளார்.

அரசியலில் பேரம்பேசும் போது சிலவற்றைப் பெற்றுக்கொள்வதற்காக சில விட்டுக்கொடுப்புக்களைச் செய்வது இராஜதந்திரம்தான். ஆனால், எதனையுமே பெற்றுக்கொள்ளாமல் எல்லாவற்றையுமே விட்டுக்கொடுப்பது இராஜதந்திரமா என்பதுதான் விக்கினேஸ்வரன் எழுப்பியிருக்கும் கேள்வி. தமிழ்த் தேசியக் கூட்டமைப்பைப் பொறுத்தவரையில் அதற்கு பேரம்பேசும் பலம் கடந்த 3 வருட காலத்தில் அதிகமாகவே இருந்திருக்கின்றது. எதிர்க்கட்சித் தலைமைப் பதவி அதனிடமிருந்தமையால் சர்வதேச ரீதியான அங்கீகாரம் அதற்கு இருந்தது. அதனைவிட பாராளுமன்றத்தில் அதற்கிருந்த 16 உறுப்பினர்கள் அதன் பேரம்பேசும் சக்தியை அதிகரித்ததிருந்தது. இந்தப் பலத்தைப் பயன்படுத்தி தமிழ் மக்களுடைய நலன்களுக்கான அழுத்தங்களைக் கொடுக்க கூட்டமைப்பின் தலைமை தவறியது.

வடமாகாண சபையில் நிறைவேற்றப்பட்ட முதலமைச்சர் நிதியம் ஒன்றை அமைத்துக்கொள்வதற்கான தீர்மானத்தை நடைமுறைப்படுத்த மத்திய அரசு அங்கீகாரம் வழங்கத் தயாராக இருக்கவில்லை. புலம்பெயர்ந்த மக்களின் நிதி உதவி உட்பல வடக்கின் அபிவிருத்திக்காக பெறக் கூடிய நிதி உதவிகளைக் கையாள்வதற்காக இவ்வாறான ஒரு நிதியம் தேவையானதாக இருந்தது. "நல்லாட்சி" அரசுடன் நெருக்கமான உறவுகளைக் கொண்டுள்ள கூட்டமைப்பின் தலைமை எந்தவொரு சந்தர்ப்பத்திலும் இந்த நிதியம் அமைக்கப்பட வேண்டும் என்பதற்கான அழுத்தத்தை அரசுக்குக் கொடுக்கவில்லை. அரசுடனான இணக்க அரசியலைப் பயன்படுத்தி கூட்டமைப்பின் தலைமை அதனைச் செய்திருக்கலாம். அல்லது தமக்குள்ள பாராளுமன்ற பலத்தைப் பயன்படுத்தி அதற்கான அழுத்தத்தை கொடுத்திருக்கலாம். கூட்டமைப்பின் தலைமை அதற்கான முயற்சிகளை முன்னெடுக்காததது எதற்காக?

இவை போன்ற காரணங்களே கூட்டமைப்பிலிருந்து விலகிச் சென்று தனியான பாதை ஒன்றை அமைத்துச் செல்ல வேண்டிய நிர்ப்பந்தத்தை விக்கினேஸ்வரனுக்கு ஏற்படுத்தியது. இதனை அவர் தெளிவாக தன்னுடைய உரையில் சொல்லியிருக்கின்றார். கூட்டமைப்பின் தலைமை மீது விக்கினேஸ்வரன் முன்வைத்திருக்கும் குற்றச்சாட்டு சாதாரணமானதல்ல. அவை மிகவும் பாரதூரமானவை. 30 வருடகாலமாகத் தொடர்ந்த ஆயுதப் போராட்டமும், அதன் பின்னர் தொடரும் ஒடுக்குமுறைகளும் தமிழ் மக்களை மிகவும் மோசமான ஒரு நிலைமைக்குக் கொண்டுசென்றுள்ளது. ஈழத் தமிழர்களின் இருப்பையே இல்லாதொழிக்கும் வகையிலான செயற்பாடுகளை சிங்கள இனவாதம் மிகவும் திட்டமிட்ட முறையில் முன்னெடுக்கின்றது. பௌத்த மதத்துக்கு முன்னுரிமை கொடுக்கும் ஒற்றையாட்சி அரசியலமைப்பிலிருந்து, மகாவலி சீ திட்டம் வரையில் இலக்காகக் கொண்டிருப்பது இதனைத்தான். கூட்டமைப்பின் தலைமை இவை அனைத்தையும் எதிர்கொள்ளும் வகையில் செயற்படுமா என்ற கேள்வி எழுகின்றது. விக்கினேஸ்வரனின் நல்லூர் பிரகடனத்துக்குக் கிடைத்துள்ள பெரும் வரவேற்புக்குக் காரணம் இதுதான்!

## தேசியத் தலைவரின் சிந்தனையிலிருந்து



அனைத்துத் தமிழ் மக்களும் ஒரே இனம் என்ற தேசாபிமான உணர்வுடன் போராட்டத்தில் பங்கு கொண்டால் எமது விடுதலை இலட்சியம் வெற்றி பெறுவது நிச்சயம்

மாவீரர்களின் பெற்றோர், உறவினர்களுக்கு மாவீரர்களின் நினைவை ஈழமுரசில் பதிவு செய்ய எமக்கு அனுப்பி வைக்கவும்



எங்களுக்காய் தங்கள் வாழ்வை தியாகம் செய்த எம் தெய்வங்களை தினமும் நினைவு கூருவோமாக.

ஈழமுரசு
CANADA EELAMURASU

எம்முடனான தொடர்புகளுக்கு:
647-808-7766
647-408-8049



email: eelamurasu@yahoo.com
https://www.facebook.com/Eelamurasu-140017762995000/

# துவண்டு போகாத தமிழ் மக்களின் நீதிக்கான குரலாய் நிமிர்ந்து நின்ற



## விக்கேஸ்வரனின் ஐந்தாண்டுக் காலம்.

மு.திருநாவுக்கரசு

சிலம்பிற்கு மகிமை கண்ணகியால் கிடைத்தது. சிம்மாசனத்திற்கு மகிமை அதில் வீற்றிருப்பவரால் கிடைக்கும்.

கண்ணியின் காற்சிலம்பு உடைந் தேனும் நீதியை உரைத்தால் அது வரலாற்றில் அழியாவரம் பெற்றது.

திரு.விக்னேஸ்வரன் தமிழ் மக்களின் நீதிக்கான குரலாய் சளையாது ஒலித்தன் மூலம் தமிழ் மக்களின் பாதுகாவலனாய் வரலாற்றில் ஓர் இடத்தை தனக்கென பதித்துள்ளார்.

திரு.விக்னேஸ்வரன் வடமாகாண சபை முதலமைச்சராய் பதவியில் இருந்த இந்த ஐந்தாண்டு காலங்களிலும் அவர் ஆற்றிய வரலாற்றுப் பாத்திரம் பற்றிய ஒரு மதிப்பீடாகவே இக்கட்டுரை அமைகிறது.

அரசியல் நடவடிக்கைகளை அதன் விளைவால் மதிப்பீடு செய்ய வேண்டுமென்ற வரலாற்றுக் கோட்பாட்டின் மீது நம்பிக்கை கொண்ட ஓர் அரசியல் வரலாற்று மாணவன் நான். விருப்பு வெறுப்புக்களுக்கும், புகழுரைகளுக்கும் மதிப்பீட்டில் இடமில்லை. மதிப்பீடு என்பது அதனை உள்படி அடையாளங்காண்பதுதான்.

திரு.விக்னேஸ்வரனின் ஐந்தாண்டு பணியென்று ஒரு பட்டியலை நீட்டுவது மட்டும் மதிப்பீடாகிவிட முடியாது. பச்சைக்கண்ணால் பார்க்கும் பார்வையும் மதிப்பீடாகிவிடாது. அதாவது பூமியில் நின்று பார்க்கும் போது சந்திரன் வெறும் ஆறு அங்குல விட்டமுள்ள ஒரு தண்மையான பொருளாய் காட்சியளிக்கலாம். ஆனால் உண்மையில் அதனை காட்சிக்கு அப்பால் தீர ஆராயும் போது அதன் பாரிய அளவும், அதன் கற்பாறைத் தன்மையும் தெரியவரும். ஆதலால் ஒன்றை வெறும் பார்வைக்கு அப்பால் தீர ஆராய்வதைத்தான் மதிப்பீடு என்பது தன் இலக்காய் கொள்கிறது.

திரு.விக்னேஸ்வரன் வானளாவ கட்டடங்களை எழுப்பவில்லை, தொழிற் சாலை அமைக்கவில்லை, பூங்காக்களை உருவாக்கவில்லை. ஆனால் அவர் தமிழ் மக்களின் நீதிக்கான குரலாய் வானளாவ உயர்ந்து காலங்களைக் கடந்து நிற்கின்றார். இதுதான் அவர் வகித்த ஐந்தாண்டுகால பாத்திரத்தின் முதற் பெருங்கனி.

நெற்றிக்கண்ணை சிவபெருமான் காட்டிய போது அவருடன் ஒத்துழைக்கத் தவறினால் தான் சாம்பலாக நேரும் எனத் தெரிந்து கொண்டும் "நெற்றிக் கண்ணைக் காட்டிலும் குற்றம் குற்றமே" என்று சொல்ல நக்கீரன் தவறவில்லை என்று திருவிளையாடல் புராணம் கூறுகிறது.

ஆயுதந்தாங்கிய பெரும் படையினரின் மத்தியில், மனிதர்களை எப்படி இறந்தார்கள் என்று தெரியாமல் கொலை செய்யக்கூடிய தொழில்நுட்பத்தைக் கொண்டுள்ள அரசியல் சூழலில் அதிகார சுகமும், பதவி மோகமும் தங்கத்

**திரு.விக்னேஸ்வரன் வானளாவ கட்டங்களை எழுப்பவில்லை, தொழிற் சாலை அமைக்கவில்லை, பூங்காக்களை உருவாக்கவில்லை. ஆனால் அவர் தமிழ் மக்களின் நீதிக்கான குரலாய் வானளாவ உயர்ந்து காலங்களைக் கடந்து நிற்கின்றார். இதுதான் அவர் வகித்த ஐந்தாண்டுகால பாத்திரத்தின் முதற் பெருங்கனி.**

தாம்பாளத்தில் ஆட்சியாளர்களால் நீட்டப்பட்டிருக்கக்கூடிய சூழலில் பாதிக்கப்பட்ட தமிழ் மக்களுக்கான நீதியின் பேரால் அவரது பதவிக்காலம் நிமிர்ந்து நின்றது. அவரது இத்தகைய நிலைப்பாட்டின்கு எதிராக நிற்கும் கூட்டமைப்பினர்கூட இந்த உண்மையை மறுக்க முடியாமல் வெளிப்படையாய் பேசிவருகின்றனர் என்பதும் இங்கு சுட்டிக்காட்டப்படக் கூடியது.

தமிழ் மக்கள் சளையாத மனம் படைத்தோர் என்பதை அவர்களது கடந்த கால வரலாறு நிரூபித்துள்ளது. ஒருவேளை தமிழ்த் தேசியக் கூட்டமைப்பினரின் தடம்புரளலால் தமிழ் மக்களின் நீதிக்கான சளையா வரலாறு பதங்கெட்டுப் போய்விட்டதோ என்ற அச்சம் எழுந்த சூழலில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பினரின் தடம்புரண்ட அரசியல் தலைமைத்துவத்திற்கு மாற்றாக திரு.விக்னேஸ்வரன் குரல் கொடுக்கத் தொடங்கினார்.

வரலாற்றில் நெருக்கடிகள் ஏற்படும் போதும், இருக்கும் தலைமைகள் தடம்புரளும் போதும் மாற்றுத் தலைமைகள் எழுவது இயல்பு. அந்த வகையில் "தமிழ் மக்கள் கூட்டணி" என்ற ஒரு புதிய அரசியல் கட்சிக்கான அங்குராற்பணக் கூட்டம் 24ஆம் தேதி நல்லூரில் நிகழ்ந்த போது அதில் உரையாற்றிய யாழ் பல்கலைக்கழக சட்டத்துறைத் தலைவர் கலாநிதி குமரகுருபரன் கூறிய கருத்து இங்கு கவனத்திற்குரியது.

அதாவது தமிழ் மக்களின் அரசியல் வரலாற்றில் மாற்றுத் தலைமைகள் எழுந்த கட்டங்களை அவர் அடையாளங்காட்டி பேசுகையில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் தலைமைத்துவத்திற்கு எதிரான ஒரு மாற்றுத் தலைமைத்துவத்தை நெருக் கடி நிறைந்த இக்காலத்தில் திரு. விக்னேஸ்வரன் முன்வைத்துள்ளார் என்று மிகச் சரியாகவே குறிப்பிட்டுள்ளார்.

இக்கூட்டத்தில் உரையாற்றிய தமிழ் மக்கள் பேரவையின் இணைத் தலைவர்களில் ஒருவரான மருத்துவர் லஷ்மன் பேசுகையில் தமிழ்த் தேசிய இயக்கம் உருவாக வேண்டியதன் முக்கியத்துவத்தைப் பற்றிக் குறிப்பிட்டார்.

மாற்றுத் தலைமை என்பதும் ஒரு தேசிய இயக்கத்தை இயக்குவது என்பதும் ஒரு நாளில் முளைத்தெழக்கூடிய விடயமல்ல. அது ஒரு வரலாற்றுப் போக்கைக் கொண்டது. அதேவேளை மிகக்கடினமான பாதையையும் கொண் டது. இது கடந்த ஐந்தாண்டுகால வரலாற்று வளர்ச்சியின் வெளிப்பாடு. எனவேதான் இதனை வளர்ச்சி விதிக்கு ஊடாக மதிப்பீடு செய்ய வேண்டிய அவசியம் அறிவியல் ரீதியாக எழுகிறது.

காகத்தின் கூட்டில் குயில் முட்டை குஞ்சானாலும் அது காகமாய் கரையாது குயிலாள் கூவுவது போல தமிழ்த்தேசிய கூட்டமைப்பின் பாசறையில் கருத் தரித்த திரு விக்னேஸ்வரன் சேர்ந்த தன் வண்ணமாகாமல் தமிழ் மக்களின் நீதிக்கான குரலாய் ஒலிக்கத்தொடங்கினார் அரசாங்கத்தில் நீதித்துறை அதிகாரியாய் வாழ்ந்த அவரை தமிழ்மக்களின் வரலாற்றுப் பட்டடை தமிழ்மக்களின் உரிமைக்கான தலைவராய் கடந்த ஐந்து ஆண்டுகளில் கடைந்தெடுத்துள்ளது.

திரு:விக்னேஸ்வரன் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் கருப்பையுள் உதித்தவர். ஆரம்பத்தில் அவர்கள் மீது நம்பிக்கையும், விசுவாசமும் கொண்டு செயற்படத் தொடங்கியவர். கூடவே இனப்படுகொலையின் பேரால் குற்றம் சுமத்தப்பட்ட அன்றைய ஜனாதிபதி மகிந்த ராஜபக்ஷவின் முன்னிலையில் நல்லெண்ண வெளிப்பாட்டின் பெயரால் பதவிப் பிரமாணம் செய்து கொண்டார். அப்போது ஆயுதப் போராட்ட தரப்பின் மீதும் தனக்கு இருந்திருக்கக்கூடிய உடன்பாடு இன்மைகளையும் வெளிப்படுத்தினார். இதனால் தமிழ்த் தரப்பிலும் அவர் ஆரம்பத்தில் விமர்சனத்திற்கு உள்ளாகியிருந்தார். இதுதான் அவரது பதவிக்கால தொடக்க அரசியலாய் அமைந்தது.

ஆனால் நடைமுறை அவருக்கு வழிகாட்டத் தொடங்கியது. இனப்பிரச் சினையைத் தீர்ப்பதற்கான "அரசியல் திடசித்தம்" (political will) சிங்களத் தலைவர்களிடம் இல்லை என்பதையும், தமிழ்த். தேசியக் கூட்டமைப்பு தன்னை ஒரு கைப் பொம்மையாகப் பயன்படுத்தி தமக்கு வேண்டிய சுயலாபங்களை அடைய முற்படுகிறது என்பதையும் கண்டுகொண்டார். தமிழ் மக்கள் கூட்டணியின் அங்குராற்பண உரையின் போது இதனை அவர் வெளிப்படுத்தியுள்ளார்.

இலங்கையில் தமிழ் மக்களுக்கான உரிமையுடன் சிங்கள மக்களுடன் இணைந்து வாழ்வதற்கான முன்முயற்சிக ளில் தமிழ்த் தலைவர்கள் ஈடுபட்டதையும் ஆனால் ஒரு நூற்றாண்டுகாலமாக இதற்கு எதிரான நிலைப்பாட்டையே சிங்களத் தலைவர்கள் மேற்கொண்டனர் என்பதையும் மேற்படி தனது அங்குராற் பண உரையில் குறிப்பட்ட விக்னேஸ்வரன் அவ்வாறு தமிழ் மக்களின் உரிமைகளை மதித்து சிங்களத் தலைவர்கள் செயற்பட்டிருக்குமிடத்து இலங்கை சிங்கப்பூரைவிடவும் அபிவிருத்தி அடை ந்த நாடாக வளர்ந்திருக்கும் என்றும் குறிப்பிட்டு தனது போர்க்குரலை உயர்த்தினார்.

சிங்கள ஆட்சியாளர்களைப் பொறுத்த வரையில் தமிழ் மக்களுக்கான உரிமைகளை ஏற்றுக் கொண்டு அவர்களுடன் இணைந்து வளமான ஓர் இலங்கையை கட்டியெழுப்புவதற்குப் பதிலாக தமிழ் மக்களை ஒடுக்கு வதற்காக அந்நிய நாடுகளிடம் கையேந்திய நிலையில் இலங்கையை இரத்த சகதியாக மாற்றியது மட்டுமின்றி இலங்கையை அந்நிய அரசுகளின் வேட்டைக் காடாகவும் மாற்றிவிட்டனர்.

தனது ஐந்தாண்டுகால அரசியல் அனுபவத்தின் மூலம் சிங்கள ஆட்சியாளர்களையும், சிங்களத் தலைவர்களையும், சிங்கள

30 ஆம் பக்கம் பார்க்க

# களம்

*மேஜர் அல்பேட்*

## வீரவணக்கம்



நிலையுடன் பெயர்: மேஜர் அல்பேட்
நிலையான பெயர்: கந்தையா ரூபநிதி
வீரப்பிறப்பு: 24.06.1961
நிலையான முகவரி: அச்சுவேலி தெற்கு
நிகழ்வு: 21.12.1985 சுதுமலையில் சிறிலங்காப்படையுடனான மோதலின் போது வீரச்சாவு

நாம் ஏராளமான மரணத்தைத் கண்டு விட்டோம். தோழர்களின் சாவு எம்மைப் பாதிக்காது. வீரச் சாவு எமக்குப் பரீட்சையமானது. சாவைச் சந்திக்கத் தயாராக இருக்கின்றோம் என்றுதான் நாம் இறுமாந்திருந்தோம். ஆனால் உன் சாவைச் சந்தித்த போது எம் இதயம் உருக்குலைந்து தளர்ந்து, எம் உள்ளம் சூனியமாகியதை நாம் எப்படி வெளிப்படுத்த முடியும்.

6 அடி 2 அங்குலமான உன் உயரமான (நீளமான) உடல் அசையாது கிடந்த நிலைகண்டு மக்கள் பதறியதை, உன் கிராமமே கலங்கியதைக் கண்டு உன் மரணம் தமிழ் மக்களை எந்த அளவுக்குப் பாதித்திருக்கின்றது. என்பதை அறிந்து நாம் துடித்தோம்.

எம் புலம்பலை நிறுத்திவிட்டு அல்பேட்டை பற்றிபண்டிதர் ஆயுதக் கிடங்குகளுக்குப் பொறுப்பாக இருந்து வேலை செய்த காலத்தில் பண்டிதருக்கு அடுத்தபடியாக இருந்து வேலை செய்து இயக்கத்தின் நன் மதிப்பைப் பெற்றவன், "கந்தையா" என்று செல்லமாக பண்டிதரால் அழைக்கப்பட்டவன். அச்சுவேலியில் நடைபெற்ற எம் தளம் மீதான இராணுவ முற்றுகையில் தன்னுடைய துப்பாக்கியில் இருந்த குண்டுகள் தீருவரை போராடி வெற்றிகரமாக வெளியேறியவன். பண்டிதரைப் பலிகொண்ட அந்தப் பெரிய முற்றுகையில் இருந்து வெற்றிகரமாக வெளியேறியதே அவனுடைய திறமைக்குச் சான்றாகும்.பண்டிதரின் மறைவுக்குப் பின் ஆயுதக் கிடங்குகளின் பொறுப்பாளராகப் பணியாற்றி பண்டிதர் இழப்புக்கு ஈடு செய்தவன். 1982ஆம் ஆண்டு தொடக்கம் தன்னை எம் இன விடுதலைக்காக அர்ப்பணித்துப் பணியாற்றியவன். அல்பேட்டை காணும் யாரும் போரிடுவதில் அனுபவம் மிக்கவன் என்பதை தவறின்றி ஊகிக்க முடியும். முதல் பார்வைக்கு அவன் வயது இருபதுக்கு மேல் இருபத்துநாலுக்கு உள்ளதாகவே இருக்கும் என்று தோன்றும். ஆனால் வெய்யிலிலும் காற்றிலும் அடிபட்டிருந்த அவன் முகத்தையும் கண்களின் அருகிலும் நெற்றியிலும், வாயின் பக்கங்களிலும் நுண்ணிண இழைகளாக விழுந்திருந்த சுருக்கங்களையும் சிந்தனையில் ஆழ்ந்தகளைத்த கருவிழிகளையும் உற்றுக்கவனித்தபின் அவன் வயதில் இன்னும் பத்து ஆண்டுகளைக் கூட்டலாம் போலிருக்கும்.

அல்பேட் கோபித்ததை, கோபப்பட்டதை நாம் காணவில்லை என்றே கூறலாம். ஏனோ தெரியவில்லை அவனுக்குக் கோபம் வருவதில்லை. நாம் சிலவேளைகளில் பேண்டுமென்றெ சீண்டுவோம். அப்போதுகூட அவன் எருமை மாட்டில் மழைபெய்வது போல இருப்பான். அன்பினால் வழிநடத்தி,அரவணைப்பால் பாதுகாத்து, அவன் வளர்த்த அவனுடைய வீரர்கள், அல்பேட்டைப் போலவே உருவாகி இருப்பதைக் கண்டு வியப்புடன் அல்பேட்டுக்குத் தலை வணங்குகின்றோம். குழந்தைகள் என்றால் அல்பேட்டுக்கு அலாதி பிரியம். குழந்தைகளோடு பழகும்போது அவனும் ஒரு குழந்தையாகி மழலை மொழி பேசுவதைக் கண்டு நாம் சிரித்த பொழுதுகள் ஏராளம்.எமது முகாம்களில் அல்பேட்டைச் சுற்றி ஒரு மழலைப்பட்டாளமே இருக்கும். அந்த சின்னஞ் சிறுசுகள், அல்பேட்டைக் காணாமல் தவித்த தவிப்புக்கள், அவர்களைப் பொறுத்தவரையில், அவன் கோவிலுக்குப் போய்விட்டான். கோவிலிலிருந்து வருவான். வரும்போது அவர்கள் அடிக்கடி கேட்ட, சொல்லிவிட்ட சாமான்கள் வேண்டி வருவான். அல்பேட் அவர்களை "குட்டிச் சாத்தான்" என்று அழைப்பது வழக்கம் அந்தக் குட்டிச்சாத்தான்கள் அல்பேட் கோவிலுக்குப் போய்விட்டதை, போய்விட்ட செய்தியை மிகவும் சந்தோ'த்துடனும் மிகுந்த குதூகலத்துடனும் தமக்குள் பரிமாறிக்கொண்டார்கள்அவர்கள் அந்த மழலைகள், அல்பேட் கோவிலுக்குப் போய் திரும்பிவருவான் என்பதை எதிர்பாத்துக் கொண்டிருக்கின்றார்கள்

யாழ் பொலிஸ் நிலையத் தாக்குதலின் பொது இராணுவத் தந்திரத்துக்கமைய கோட்டையில் இருந்து எதிரிகளை வெளியில் வராமல் தடுக்கும் பொறுப்பும் கோட்டை மீதான தொடர்ந்த தாக்குதலை நடத்தும் பொறுப்பும் அல்பேட்டிடம் கொடுக்கப்பட்டிருந்தது. தனது பணியைச் செவ்வனே செய்துமுடித்து எமது வெற்றிக்கு வழிவகுத்தவன். ஒருநாள் விடியற்காலை அல்பேட் தன் முகாமில் உள்ள தோழர்களை தினசரி காலைப்பயிற்சிக்குத் தயார் படுத்திக் கொண்டிருக்கையில், "வோக்கி ரோக்கி"அலறியது. அவன் வோக்கியை இயக்கி அழைத்த இடத்துடன் தொடர்பை ஏற்படுத்தியபோது, சுதுமலையில் உள்ள எமது முகாம் ஒன்று இராணுவத்தினரால் முற்றுகையிடப்பட்டும் செய்திகிடைத்தது. அல்பேட் தன் தோழர்களைப் பார்த்து உரக்க அழைத்து விரைந்து, ஆயுதங்களுடன் வானில் ஏறி விரைந்தான். வான் இணுவில் பகுதியால் சுதுமலையை அண்மித்தபோது மூன்று "பெல் ஏ.பி. 412" ரக ஹெலிகொப்டர்கள் அப்பகுதியை சுற்றிச் சுற்றி மெசின் கண்ணினால் குண்டுமழை பொழிந்து கொண்டிருந்தது.

மேலே வானத்திலே வட்டமிட்டுக்கொண்டிருந்த அலுமினியப் பறவைகளில் ஒன்று உயரத்தில் இருந்து பாய்ந்து மலையில் வழகி வருவது போல மிகமிக வேகமாக வாகனத்தை நோக்கிப் பாய்ந்து வந்து "50 கலிபர் மெசின் கண்ணினால் சுட்டுத் தள்ளியது. குண்டு வரிசைகள் வாகனத்திற்கு மிக அருகாக நிலத்திலே கோடிட்டுச் சென்றது. குறி தவறிவிட்டது. அல்பேட் தன் தோழர்களைப் பார்த்து "டேய் தும்பியில் இருந்து சுடுறாங்கள் கவனமாக இருங்கோ" என்று கூறி முடிக்கவும், (பெல் ஏ.பி. 412 ஹெலிகொப்டர்களை நாங்கள் "தும்பிகள்" என்று அழைப்பது வழக்கம்) உருமறைப்பு வர்ணம் பூசப்பட்ட இன்னொரு அலுமினியத் தும்பி பக்கவாட்டாக தாழப்பறந்து வந்தது. "சுடப்போறான், வானை எங்காவது ஒருபுறம் திருப்பி ஒதுக்கு" என்று கத்தினான் அல்பேட். வ்ான் ஒதுங்க அல்பேட் தோழர்களுடன் கீழே பாய்ந்த போது விமான எஞ்சின் கடகடப்புச் சத்தத்துடன் மெசின் கண்ணின் இடைவிடாத குண்டுச் சத்தத்துடன் தும்பி தாழப்பறந்து சென்றது. வானுக்கு முன்பாக குறுக்குப் பாட்டாக குண்டு வரிசை மண்ணிலே கோடிட்டது. குறி தவறிவிட்டார்கள். மறுபடியும் இன்னும் அருகாக அல்பேட்டும், வானும், சேதமின்றித் தப்பித்துக்கொண்டது.

அல்பேட் தன் "வோக்கி ரோக்கியுடன்" முகாமுக்குத் தொடர்பு கொண்டபோது.முகாமுக்கு பின்பாக ஹெலிகொப்டர்கள் இராணுவத்தினரை இறக்கிய தோட்டப்பகுதியான இடத்திற்குச் செல்லுமாறு பணிக்கப்பட்டது. குழு அவ்விடத்தை அணுகியபோது இராணுவக் கமாண்டோக்கள் தாம் இறங்கிய இடத்தில் சிலரை நிலைப்படுத்திவிட்டு, மற்றும் சிலர் முகாமை நோக்கி சென்றுகொண்டிருந்தனர அல்பேட் கிளர்ச்சியுற்றான். ஆனால் அது சாவு குறித்த அச்சமல்ல. மிக, மிக வீரமுள்ள பதற்றமற்ற மனிதர்களுக்கு இயல்பான ஒன்று. ஆபத்து பற்றிய முன்னுணர்வு தானும் இல்லை இது. அவன் கவலைப்பட்டது கொமாண்டோக்களை எப்படியாவது தடுக்க வேண்டும்.

தோட்டங்களில் சில சில இடங்களில் மரவள்ளிச் செடிகள் மிக அழகாக செழிப்பாக செறிவாக வளர்ந்திருந்தது. உயர்ந்து செழிப்பாக, செறிவாக வளர்ந்திருந்த மரவள்ளிப் பற்றைகள் ஒளியைப் புகவிடாமல் இருட்டைக் கொடுத்துக்கொண்டிருந்தன.

அல்பேட் தனது குழுவினர் சகிதம் அவர்களைத் தாக்கத் தொடங்கினான். இராணுவத்தினர் 2 அங்குல சிறய மோட்டர்கள் சகிதம் எதிர்த்தாக்குதல் நடத்தினர். முன்னேறிய இராணுவக் கொமாண்டோக்கள் மீதும் பலத்த தாக்குதல் நடத்தப் பட்டது. முன்னேறியவர்கள் மீதும் தாக்குதல், நிலைகொண்டு காவல் செய்துகொண்டிருப்பவர்கள் மீதும் தாக்குதல், வானத்தில் சுற்றிக்கொண்டிருந்து இவர்களுக்கு காவல் செய்யும் அலுமினியப் பறவைகளுக்கும் தாக்குதல். புலமணி நேரம் இடைவிடாத தாக்குதல். கொமாண்டோக்கள் பின்வாங்கத் தொடங்கினார்கள் பின்புறத்தில் அவர்களை விமானம் ஏறவிடாமற் செய்வதற்காக யமனைப் போல் நின்றுகொண்டிருந்தான் அல்பேட் எனவே அல்பேட் குழுவின் மேல் பலத்த தாக்குதல் மேற்கொள்ளப்பட்டது.

பலவர்ணம் பூசப்பட்ட "பெல் ஏ.பி. 412" ஹெலிகாப்டர்கள் மூன்றும் தம்முடைய எம் 60 ரக மெசின் கண்ணாலும் வட்டமிட்டுத் தொடர்ந்து தாக்குதலை நடாத்தின. அல்பேட் குழுவினரை நோக்கி வந்த மோட்டார் குண்டுகள் வெடித்துக்கொண்டிருந்தன. திடீரென்று அல்பேட் சுருண்டு விழுந்தான். இடது கண்ணுக்கு கீழே பெரிய ஓட்டை அதிலிருந்து குருதி ஊற்றெடுத்துப் பாயும் நீர்த்தாரைகள் போல பாய்ந்நது. அல்பேட்டைத் தூக்கிக் கொண்டு சிலர் பின் விரகின்றனர். அல்பேட்டுக்கு சிகிச்சை அளிப்பதற்கு முன்பாகவே அவன் தன் உயிரை இந்த மண்ணின் விடுதலைக்காக அர்ப்பணித்துவிட்டான்.

கிட்டு- களத்தில் தை 1986



# விக்கினேஸ்வரனின் 'தமிழ் மக்கள் கூட்டணி'

## தமிழ் தேசிய அரசியலில் ஒரு புதிய திருப்புமுனையை ஏற்படுத்துமா?

யதீந்திரா



பலரும் நீண்டகாலமாக எதிர்பார்த்த ஒரு விடயம் கடந்த 24ம் திகதி நிகழ்ந்திருக்கிறது. விக்கினேஸ்வரன் தனது அடுத்தகட்ட அரசியல் பயணம் தொடர்பில் தெளிவான அறிவிப்பை செய்திருக்கிறார். இதுவரை அவர் பக்கத்தில் ளிவானதொரு பதிலில்லாமல் இருந்தது. இது தொடர்பில் பலரும் குறைபட்டுக் கொண்டிருந்தனர். இந்தப் பத்தியாளரும் பல்வேறு சந்தர்பங்களில் இது தொடர்பில் வலியுறுத்தி வந்திருக்கிறார். ஆனால் அந்த பிரச்சினை தற்போது தீர்ந்துவிட்டது. விக்கினேஸ்வரன் தனது கட்சியின் பெயர் - தமிழ் மக்கள் கூட்டணி என்று அறிவித்திருக்கிறார்.

தமிழ் தேசிய அரசியல் வரலாற்றில் காலத்துக்கு காலம் பல அரசியல் கட்சிகளும் கூட்டுக்களும் உருவாகியிருக்கின்றன. பின்னர் அவ்வாறு உருவாகிய கட்சிகளும் கூட்டுக்களும் கால மாற்றத்தினால் சிதைவடைந்தும் போயிருக்கின்றன. ஒரு கட்சி, அந்தக் கட்சி நிலைகொண்டிருக்கும் குறிப்பிட்ட சூழலை எதிர்கொள்ள முடியாமல் போகும் போது புதிய கட்சி ஒன்றின் தேவைப்பாடு உணரப்படுகிறது. அது மக்களின் தேவையாகவும் உணரப்படும் போது மக்கள் அதன் பக்கமாக சாய்கின்றனர். அது ஒரு மக்கள் கட்சியாக மாறுகிறது.

எந்தவொரு அரசியல் வரலாற்றை எடுத்துநோக்கினாலும், எங்குமே அரசியல் வன்முறையில் ஆரம்பிப்பதில்லை, அது ஜனநாகயரீதியான ஒன்றாகவே ஆரம்பிக்கின்றது. ஆனால் எப்போது ஜனநாயக அரசியலின் மீதான நம்பிக்கை முற்றிலும் சிதைகின்றதோ அப்போதுதான், வன்முறை வேர்கொள்ள ஆரம்பிக்கும். அப்படித்தான் தமிழ் தேசிய அரசியலிலும் நிகழ்ந்தது. தமிழ் மிதவாதிகளால், ஆரம்பத்தில் இலங்கை தமிழரசு கட்சி பின்னர் தமிழர் விடுதலை கூட்டணி ஆகியவற்றின் அரசியல் அணுகுமுறைகள் மீது கோபம் கொண்டு எழுச்சி பெற்ற இளைஞர்களை, அன்றைய மிதவாதிகளால் சரியாக கையாள முடியவில்லை. அவர்களை ஜனநாயக வழி நோக்கி திருப்பக் கூடிய ஆற்றல் அன்றைய மிதவாத தமிழ் தலைவர்களிடம் இருக்கவில்லை. இதன் காரணமாக இளைஞர்கள் ஆயுத வழி நோக்கிச் செல்லுவதற்கு நிர்பந்திக்கப்பட்டனர். இவ்வாறு ஆரம்பித்த வன்முறை அரசியல்தான் பல்வேறு கால கட்டங்களால் நகர்ந்து, இறுதியில் பேரவலங்களுடன் முற்றுப்பெற்றது.

இந்த இடத்திலிருந்து தமிழ் தேசிய அரசியலை அடுத்த கட்டத்திற்கு எடுத்துச் செல்லும் பொறுப்பையே தமிழ் தேசிய கூட்டமைப்பு ஏற்றுக் கொண்டது. அதற்கான தலைமையை வழங்கும் பொறுப்பை காலம் சம்பந்தனிடம் சேர்த்தது. முள்ளிவாய்க்கால் பேரழிவின் பின்னர் தமிழ் மக்களிடம் இருந்தது ஒன்றே ஒன்றுதான். அதாவது, அந்த அழிவுக்கான நியாயம் கோரும் தார்மீக உரிமை ஒன்றுதான். எந்த சர்வதேச சக்திகள் விடுதலைப் புலிகளுக்கு எதிரான யுத்தத்திற்கு முண்டுகொடுத்தனரோ, அந்த சக்திகளே பின்னர் மகிந்த ராஜபக்ச அரசின் மீது மனித உரிமை மீறல் குற்றச்சாட்டுக்களையும் முன்வைத்தன. சர்வதேச சக்திகளின் நகர்வுகள் அப்படித்தான் இருக்கும். அதில் ஆச்சரியப்பட அல்லது ஆதங்கப்பட ஒன்றுமில்லை.

மனித உரிமை மீறல் குற்றச்சாட்டுக்கள் என்பது தமிழர் அரசியலை சர்வதேச அரங்கின் பேசுபொருளாக்கியது. போர்க்குற்றங்கள், மனித குலத்திற்கு எதிரான குற்றங்கள் போன்ற விடயங்களையும் தமிழ் தேசிய அரசியலையும் பிரித்துப் பார்க்க முடியாதளவிற்கு, ஒரு புதிய அரசியல் சூழல் உருவாகியது. மிக மோசமாக பாதிக்கப்பட்ட ஒரு இனத்தின் தலைமை என்னும் வகையில் மேற்படி விடயங்களை கையாள வேண்டிய கடமை கூட்டமைப்புக்கு இருந்தது. புலம்பெயர் அரசியல் சமூகம் என்னதான் விடயங்களை எடுத்துக் கூறினாலும், நிலத்தில் மக்களை பிரதிநிதித்துவப்படுத்தும் அரசியல் தலைமை அது தொடர்பில் எத்தகைய நிலைப்பாட்டை கொண்டிருக்கிறது என்பதைக் கொண்டே அந்த விடயங்களின் கனதி சர்வதேச அரங்குகளில் உணரப்படும். ஆரம்பத்தில் இவற்றின் மீதான உறுதிப்பாட்டை காண்பித்துவந்த கூட்டமைப்பு படிப்படியாக அவற்றின் மீதான பிடியை தளர்த்தத் தொடங்கியது. ஆட்சிமாற்றத்தை தொடர்ந்து சர்வதேச அழுத்தங்களை கையாளும் தங்களின் பொறுப்பை முற்றிலும் இழந்து போனது. புதிய ஆடசியாளர்களின் வாக்குறுதிகளுக்கு பின்னால் இழுபடத் தொடங்கியது. கூட்டமைப்பின் தலைவரான சம்பந்தன், இலங்கையின் எதிர்க்கட்சியின் தலைவராகவும் இருக்கின்ற நிலைமையை தங்களுக்கு சாதமாக்கிக் கொண்ட, மைத்திரி-ரணில் அரசாங்கம் உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் கூட்டமைப்பை தங்களின் காவலாளிகளாக மாற்றிக் கொள்வதில் வெற்றிபெற்றது. இன்று கூட்டமைப்புத்தான் இந்த கூட்டரசாங்கத்தின் நம்பிக்கைக்குரிய பங்காளி.

கூட்டமைப்பு இவ்வாறு அரசாங்கத்தின் ஏவலாளிகளாக மாறிவிட்ட ஒரு சூழலில்தான், கூட்டமைப்பின் சார்பில் வடக்கு மாகாண முதலமைச்சராக தெரிவான விக்கினேஸ்வரன், கூட்டமைப்பு கைவிட்ட ஆனால், 2013இல் தான் மக்கள் முன்வைத்த தேர்தல் விஞ்ஞாபனத்தில் வழங்கப்பட்ட வாக்குறுதிகளை கையிலெடுத்தார். அதன் படி செயலாற்ற ஆரம்பித்தார். இதன் முதல் கட்டமாக இறுதி யுத்தத்தின் போது தமிழ் மக்களுக்கு எதிராக நிகழ்த்தப்பட்ட கொலைகள் ஒரு இனப்படுகொலை என்னும் தீர்மானத்தை நிறைவேற்றினார்.

இதனையும் சுமந்திரன் போன்றவர்கள் வேறுவிதமாக காண்பிக்க முற்படுகின்றனர். அதாவது, இதனை டெலோவின் உறுப்பினர் சிவாஜிலிங்கம் முன்மொழிய முற்பட்ட போது விக்கினேஸ்வரன் அதனை தடுத்ததாகவும், பின்னர் அதனையே அவர் கொண்டு வந்ததாகவும் விமர்சிக்க முற்படுகின்றனர். இதிலுள்ள முக்கியமான விடயம் அதனை விக்கினேஸ்வரன் கொண்டு வந்ததால்தான் அது சர்வதேச அரங்குகளில் கவனிப்பைப் பெற்றது. ஒரு வேளை சிவாஜலிங்கம் போன்ற ஒருவர் கொண்டு வந்திருந்தால் அதனை அனைவரும் ஒரு நகைச்சுவையாக சிரித்துவிட்டு சென்றிருப்பர். இதனை கருத்தில் கொண்டுதான் அதனை விக்கினேஸ்வரனே முன்மொழிந்தார். இதனை சம்பந்தன் சற்றும் எதிர்பார்க்கவில்லை. இதுதான் சம்பந்தனோடு விக்கினேஸ்வரன் முரண்பட்ட முதலாது சந்தர்ப்பம். இதன் பின்னர் விக்கினேஸ்வரன் தமிழ் மக்களின் அரசியல் அபிலாஷைகள் தொடர்பில் உறுதியானதொரு குரலாகவே மாறினார். இது சம்பந்தனை தமிழர் விடயத்தில் குரலற்றவராக ஆக்கியது. தமிழ் தேசிய அரசியலில் சம்பந்தன் - விக்கினேஸ்வரன் என்னும் இரண்டு பிரிவுகள் தெரியத் தொடங்கின. இவ்வாறானதொரு சூழலில் தான் விக்கினேஸ்வரனின் தலைமையில் தமிழ் மக்கள் பேரவை உருவாகியது. பேரவையின் தலைமையில் அரசியல் தீர்வோலசனை ஒன்றும் முன்வைக்கப்பட்டது. ஆனால் சம்பந்தனோ அதனை தோற்றுப்போனவர்களின் பரிந்துரை என்று நிராகரித்தார். அப்போதும் அரசியல் தீர்வு விடயத்தில் விக்கினேஸ்வரனை இணைத்துக் கொண்டு பயணிக்க சம்பந்தன் முயற்சிக்கவில்லை. அப்போதும் தனது சுயநல ஆணவத்திற்கே முன்னுரிமையளித்தார்.

மேற்படி விடயங்களிலிருந்து நீங்கள் ஒரு விடயத்தை விளங்கிக் கொள்ளலாம். அதாவது, கூட்டமைப்பு மக்களுக்கு வழங்கிய வாக்குறுதிகளை தமது சுயநல அதிகார நலன்களுக்காக கைவிட்டுச் சென்ற நிலையில்தான் அதனை விக்கினேஸ்வரன் கையிலெடுக்கின்றார். ஒரு வேளை சம்பந்தன் தனது வாக்குறுதிகளுக்கு உண்மையாக இருந்திருந்தால் விக்கினேஸ்வரன் சம்பநுனுக்கு பக்கபலமாக இருந்திருப்பார். அலலது அவரே கூறுவது போன்று தனது பதவிக் காலம் முடியும் போது வீட்டுக்குச் சென்றிருப்பார். ஆனால் இப்போது அவரால் அப்படிச் செய்ய முடியாது. விக்கினேஸ்வரன் இதுவரை மக்களுக்கு வழங்கிய வாக்குறுதிகளுக்கு அமைவாக ஒரு சரியான அரசியல் பாதையை உருவாக்கிச் செல்பவராகவும், அதே வேளை அதனை சரியானதொரு இளம் தலைமுறையிடம் ஒப்படைத்துவிட்டுச் செல்ல வேண்டிய பொறுப்புடைய ஒருவராகவும் அவர் இருக்கின்றார். அதற்கு நிச்சயம் ஒரு கட்சி தேவை. அதனைத்தான் தற்போது செய்ய முற்சிக்கின்றார்.

விக்கினேஸ்வரனின் புதிய கட்சி அறிவிப்பு களத்திலும் புலத்திலும் பெரும் வரவேற்பை பெற்றிருக்கிறது. 2009இற்கு பின்னர் புலம்பெயர் சூழலை கையாளக் கூடிய ஒரு சரியான தலைவர் இணங்காணப்படவில்லை. விக்கினேஸ்வரன் தமிழ் தேசியத்தின் மீது காண்பித்துவரும் உறுதிப்பாடு அவரை நோக்கி புலம்பெயர் சமூகத்தையும் திருப்பியது. இப்போது களத்திலும் புலத்திலும் மக்கள் ஆதரவைப் பெற்றிருக்கும் ஒரு தலைவராக விக்கினேஸ்வரன் இருக்கிறார். 2009இற்கு பின்னர் சம்பந்தனுக்கும் இந்த வாய்ப்பு கிடைத்தது ஆனால் சம்பந்தனோ தனது சுநயல அரசியல் போக்கால் அந்தப் போக்கை கைநழுவவிட்டுவிட்டார். தற்போது அந்த வாய்ப்பு விக்கினேஸ்வரனுக்கு கிடைத்திருக்கிறது. வரலாற்றுப் போக்கில் ஒவ்வொரு சந்தர்ப்பங்களிலும் தலைவர்கள் அடையாளம் காணப்படுகின்றனர். அவ்வாறு அடையாளம் காணப்படுபவர்களுக்கு வாய்ப்புக்களும் கிடைக்கின்றன. அவ்வாறுதான் தற்போது விக்கினேஸ்வரனை வரலாறு அடையாளம் கண்டுள்ளது. விக்கினேஸ்வரன் இதனை சரியாக கையாளுவாராக இருந்தால், இது தமிழ் தேசிய அரசியலில் நிச்சயம் ஒரு திருப்புமுனையை ஏற்படுத்தும் என்பதில் ஐயமில்லை.

**விக்கினேஸ்வரன் தமிழ் தேசியத்தின் மீது காண்பித்துவரும் உறுதிப்பாடு அவரை நோக்கி புலம்பெயர் சமூகத்தையும் திருப்பியது. இப்போது களத்திலும் புலத்திலும் மக்கள் ஆதரவைப் பெற்றிருக்கும் ஒரு தலைவராக விக்கினேஸ்வரன் இருக்கிறார்**

# LIFE INSURANCE

*Mortgage Insurance*
*Line of Credit Insurance*

| Term Life Insurance / Mortgage Insurance | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| Age | | 25 | | 40 | | 50 | |
| | | M | F | M | F | M | F |
| 200k | T20 | 17 | 14 | 27 | 20 | 65 | 47 |
| 500k | T20 | 35 | 24 | 54 | 35 | 144 | 94 |
| **Permanent Life Insurance - Premium Never Change** | | | | | | | |
| 200k | WL | 81 | 71 | 150 | 131 | 233 | 200 |
| 500k | WL | 188 | 164 | 364 | 313 | 590 | 488 |
| **Critical Illness Insurance 100% Money Back** | | | | | | | |
| 50k | T75 | 44 | 42 | 90 | 85 | 177 | 148 |
| 100k | T75 | 76 | 72 | 157 | 145 | 321 | 265 |

## Living Benefits / Income Replacement

* if you get sick, accident or Soft tissue injury
* for self employed
* for business people
  if you don't have benefits
* 2 years, 5 years up to age 70 (long term disablity )
  claim எடுக்காவிட்டால் 50% பணம் மீள பெறமுடியும்

## 20 வருடம் மட்டும் பணம் செலுத்தும் காப்புறுதி

இருபது வருடங்களுக்கு பின் பணம் கட்ட வேண்டியதில்லை. ஆனால் வாழ் நாள் முழுவதும் உங்களுக்கு காப்புறு-தி இருக்கும். 20 வருடங்களுக்கு பின் விரும்பினால் காசு பெறுமதியை (Cash value) பெறமுடியும்.

## மருத்துவ பரிசோதனை எதுவும் இல்லாத காப்புறுதி

| 20 YEARS NON-MEDICAL TERM INSURANCE | | |
|---|---|---|
| Age | $100k M/F | $200k M/F |
| 30 | $21/18 | $36/28 |



இலவச ஆலோசனைக்கு அழையுங்கள்
**Philip Chandran**
Liland Insurance
**416-450-9043**
**philipsam0715@hotmail.com**

## INCOME TAX (22 years experience)

* **All year round, any tax problem with CRA, I can resolve it.**
* **new business registration** * **Accounting**
* **Bookkeeping** * **Payroll, HST**

**Super visa, RRSP Loan, RESP (Education), Travel Insurance**

கொடிய நோய்களுக்கான காப்புறுதி (critical illness) for 25 sickness நோய் வராத பட்சத்தில் கட்டிய பணம் முழுக்க மீள் பெற முடியும்

---

உங்கள் அனைத்து விதமான சட்ட ஆலோசனைகளுக்கும் நம்பிக்கையுடன் நாடுங்கள்



# SASITHARAN LAW

PROFESSIONAL CORPORATION





Vivekananthan Sasitharan

Rajabalini Sasitharan

## Barristers, Solicitors & Notaries Public

**REAL ESTATE**
Residential & Commercial - Purchases, Sales, Mortgages & Refinances

**FAMILY LAW**
Divorce, Custody & Support

**BUSINESS LAW**
Incorporations, Purchases, Sales & Leases

**ESTATE LAW**
Power of Attorney, Wills & Estate Administration

**IMMIGRATION LAW**
Skilled Migration, Provincial Nominee Program, Super Visa & Sponsorship

**Tel: 416-949-0404, Fax:416-948-0303**

10 Milner Business Court, Suite # 709
Scarborough, Ontario, M1B 3C6

---



"Call me today for a free home and auto insurance quote!"

## வீடு மற்றும் வாகனக் காப்புறுதி

**HOME + AUTO = MORE SAVINGS***









# Allstate®

You're in good hands



**RAJI LINGHAN**
*Agent*

**CELL: 416-817-5060**
**289-460-3217**
**905-427-2827 Ext 5020**

*Inclusive of all other discounts applied to Allstate's base rates. Terms and conditions apply and may vary by region. Rates and discounts subject to change. ®Trademark used under licence by Allstate Insurance Company

---

## பர்ணான்டோ

# கருவாட்டுக்கடை



- கட்டா கருவாடு
- அறக்குளா கருவாடு
- சுறா கருவாடு
- சூரை கருவாடு Balay
- நெத்தலி கருவாடு
- பொம்பிலி கருவாடு



எல்லா வகையான கருவாடுகளும் நேரடியாகவும், அனைத்து தமிழ் வர்த்தக நிலையங்களிலும் கேட்டு வாங்கலாம்!

**எமது புதிய முகவரி:**

3441 St.Clear Ave., East
Birchmount Rd and Warden Ave. க்கு இடையில் அமைந்துள்ளது.

# 647-857-1336

# நல்லூரில் நடந்த கூட்டம்

நிலாந்தன்



2015ம் ஆண்டு நோர்வேயில் நடந்த ஒரு சந்திப்பின் போது ஒரு புலமையாளர் என்னிடம் கேட்டார். “விக்னேஸ்வரனின் எதிர்ப்பு அரசியலைப் பற்றிய உங்களுடைய கணிப்பு என்ன?” என்று. நான் சொன்னேன் “அவர் தொடர்பாக நான்கு விதமான ஊகங்கள் உண்டு. முதலாவது அவர் சம்பந்தனின் ஆள். விட்டுக்கொடுப்பற்ற தமிழ்த்தேசிய சக்திகளை கூட்டமைப்பிற்குள் தக்க வைத்திருப்பதற்காக சம்பந்தரால் இறக்கப்பட்டவர் என்பது. இரண்டாவது அதே நோக்கத்திற்காக அமெரிக்காவால் இறக்கப்பட்டவர் என்பது. மூன்றாவது அதே நோக்கத்திற்காக இந்தியாவால் இறக்கப்பட்டவரென்பது. நாலாவது மேற்சொன்ன சூழ்ச்சிக் கோட்பாடுகள் எதுவும் சரியல்ல. மாறாக அவர் ஒரு நேர்மையான அற நெறியாளன். வாக்களித்த மக்களுக்கு நேர்மையாக இருக்க முயற்சிக்கிறார். எனவே அந்த மக்களின் துயரங்களுக்கு நெருக்கமாக வருகிறார். அதனால் கற்றுக்கொண்டவைகளின் பிரகாரம் அவர் அதிகபட்சம் எதிர்ப்பு அரசியலை முன்னெடுக்கிறார்” என்று.

என்னைக் கேள்வி கேட்ட புலமையாளர் ஆங்கிலத்தில் வெளிவரும் ஒரு பிரபல இணையத் தளத்திற்கு பின்பலமாய் இருப்பவர். தமிழில் மதிக்கத்தக்க அறிஞர்களில் ஒருவர். அவர் தொடர்ந்து என்னிடம் கேட்டார். “இந்த நான்கு ஊகங்களிலும் எதை நீங்கள் ஏற்றுக்கொள்கிறீர்கள்?” என்று. நான் சொன்னேன் “நாலாவதுதான் பொருத்தமானதாகத் தோன்றுகிறது” என்று. அதற்கு அவர் சொன்னார் “நானும் அப்படித்தான் கருதுகிறேன்” என்று. அப்பொழுது அவ் உரையாடலில் பங்குபற்றிய மற்றொரு செயற்பாட்டாளர் குறுக்கிட்டார். மேற்படி புலமையாளரை நோக்கி அவர் பின்வருமாறு கேட்டார் “உங்களுடைய இணையத்தளம் தானே அவர் பதவிக்கு வந்த புதிதில் அவரை கடுமையாக விமர்சித்தது? ஆனால் இப்பொழுது நீங்கள் இப்படிச் சொல்கிறீர்களே?” என்று. அதற்கு அந்தப் புலமையாளர் சொன்னார் “நாங்களும் விக்னேஸ்வரனைப் பற்றிக் கற்றுக்கொண்டதன் அடிப்படையில் எமது கருத்தை மாற்றலாம் தானே?” என்று.

விக்னேஸ்வரன் முலமைச்சர் வேட்பாளராக அறிவிக்கப்பட்ட பொழுது அதைக் கடுமையாக எதிர்த்து எழுதியவன் நான். கொழும்பு மையத்திலிருந்து வந்த அவர் காலப்போக்கில் வடக்கில் வாக்களித்த மக்களின் வலிகளுக்கு நெருக்கமானவராக மாறிய போது அவரை ஜனவசியமிக்க ஒரு மாற்றுத் தலைமையாக வர்ணித்தவர்களில் நானும் ஒருவன். அப்படி ஒரு மாற்று அரசியலுக்கு தான் இப்போதைக்கு வரமாட்டேன் என்று கடந்த ஆண்டு ஒரு சந்திப்பின் போது அவர் எனக்கு கூறினார். அச்செய்தி காலைக்கதிர் பத்திரிகையில் தலைப்புச் செய்தியாக வெளிவந்தது. இப்பொழுது அம்மாற்றுத் தலைமையாக மேலெழுவதற்கு அவர் தயாராகி விட்டார். கடந்த ஐந்தாண்டுகளாக அவர் கற்றுக்கொண்டவை அவரை அப்படி ஒரு முடிவிற்கு இட்டுச்சென்றனவா?

ஆனால் கடந்த புதன்கிழமை நடந்த கூட்டத்தில் அவர் ஆற்றிய உரையை வைத்துப் பார்க்கும் பொழுது அவர் வெகுசனப் போராட்டங்கள் தொடர்பில் அல்லது வெகுசன மைய அரசியல் தொடர்பில் இன்னும் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது என்றே தோன்றுகிறது. தன் முன்னுள்ள நான்கு தெரிவுகளை அவர் அந்த உரையில் விவாதிக்கிறார். அதில் ஒரு மக்கள் இயக்கத்தைக் கட்டியெழுப்புவது தொடர்பான தெரிவைக் குறித்து பின்வருமாறு கூறுகிறார்.... “ஆகவே இன்றைய நெருக்கடியானதும் இக்கட்டானதுமான காலகட்டத்தில் தமிழ் மக்களின் நலன்களை மையப்படுத்தி சிந்திக்கும் போது ஒரு மக்கள் இயக்கத்துக்கு தலைமை தாங்கி செயற்படும் நான்காவது தெரிவு அதிகாரமற்ற ஒரு இயக்கத்தின் வெறும் ஆதங்க வெளிப்பாடாகவே இருக்கும் என்று எனக்கு புரிந்துள்ளது. அதனால்தான் தமிழ்த்தேசியக் கூட்டமைப்பின் முக்கியஸ்தர்களில் ஒருவர் மக்கள் இயக்கமொன்றை நான் முன்னெடுத்துச் செல்வதை தாம் வரவேற்பதாகக் கூறியுள்ளார்.” என்று விக்னேஸ்வரன் உரையாற்றியுள்ளார். இவ்வாறு “அதிகாரமற்ற ஒரு இயக்கத்தின் ஆதங்க வெளிப்பாடு” என்று அவர் மக்கள் அதிகாரத்தைப் பற்றிக் கூறுவது அவர் இவ்வளவு காலமும் பேரவை தொடர்பில் கூறிக்கொண்டு வந்த இலட்சியத்திற்கு நேர் எதிராகக் காணப்படுகிறது. வெகுசன மைய அரசியலைக் குறித்து அவர் கற்றுக்கொண்டவை காணாது என்றே தோன்றுகிறது.

அதே சமயம் தேர்தல் மைய அரசியலைக் குறித்து அவர் பின்வருமாறு கூறுகிறார்.... “சாத்வீக வழிமுறைகளில் ஆரம்பித்து வன்முறைகளால் ஒடுக்கப்பட்ட தமிழ் மக்களின் போராட்டமே இன்று அரசியல் ராஜதந்திர போராட்டமாக பரிணாமம் பெற்றுள்ளது. ஜனநாயகப் தேர்தல்களில் பங்குபற்றி உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் அரசியல் ராஜதந்திர மற்றும் சர்வதேச உறவு செயற்பாடுகளில் ஈடுபட்டு எமது மக்களின் சட்ட ரீதியான பிரதிநிதிகளாக அவர்களின் கோரிக்கைகளுக்கு அங்கீகாரம் பெறுவதும் ஆதரவைப் பெறுவதுமே இந்த அரசியல் ராஜதந்திர போராட்டத்தின் அடிப்படை”. அதாவது கூட்டிக்கழித்துப் பார்த்தால் விக்னேஸ்வரன் தேர்தல் மூலம் மக்கள் அதிகாரத்தைக் கைப் பற்ற விழையும் ஒரு தேர்தல் மைய அரசியல்வாதியாகவே நல்லூரில் தன்னைப் பிரகடனப்படுத்தியுள்ளார். அதன்படி அவர் ஒரு கட்சியின் பெயரையும் அறிவித்திருக்கிறார்.

இதை இவ்வாறு எழுதும் போது கடந்த ஆண்டு இடம்பெற்ற மற்றொரு சந்திப்பை இங்கு நினைவூட்ட வேண்டும். யாழ் நகரப் பகுதியில் உள்ள ஒரு மத நிறுவனத்தில் அச்சந்திப்பு இடம்பெற்றது. ஒரு மாற்று அணியை உருவாக்க விரும்பிய பல்வேறு தரப்புக்கள் அதில் கூடின. அதன் போது இக்கட்டுரையாளர் ஒரு விடயத்தை சுட்டிப்பாக அழுத்திக் கூறினார். “ஒரு மாற்று அணி எனப்படுவது கூட்டமைப்பிற்கு எதிரான ஒரு தேர்தல் கூட்டணியாக மட்டும் இருக்கக்கூடாது. மாறாக அது கூட்டமைப்பும் உட்பட தமிழ் மிதவாதத் தலைமைகள் எங்கே சறுக்கின என்பதிலிருந்து கற்றுக்கொண்ட பாடங்களின் அடிப்படையில் ஒரு புதிய மிதவாதத்தைப் பற்றிச் சிந்திப்பதிலிருந்து அல்லது 2009 மேக்குப் பின்னரான தமிழ் எதிர்ப்பை வெளிக்காட்டத் தேவையான பொருத்தமான அறவழிப் போராட்ட வடிவமொன்றை பற்றிச் சிந்திப்பதிலிருந்தே தொடங்குகிறது” என்று. மேலும் “ஒரு புதிய கூட்டை உருவாக்கி புதிய நாடாளுமன்ற உறுப்பினர்களும், புதிய மாகாணசபை உறுப்பினர்களும் மக்கள் அதிகாரத்தைப் பெற்றபின் பழைய வழிமுறைகளிலேயே எதிர்ப்பைக் காட்டும் போது அது வேலை செய்யுமா? இப்பொழுது தேவையாக இருப்பது எது மாற்றுத் தளம்? அல்லது எது மாற்று வழி? என்று சிந்திப்பதுதான். அப்படி சிந்தித்தால்தான் கூட்டமைப்பும் அதற்கு முந்திய மிதவாதிகளும் செய்யத்தவறிய ஏதோ ஒன்றை புதிய கூட்டு செய்யலாம். அதன் மூலம் அரசாங்கத்தோடும், உலக சமூகத்தோடும் பேரம் பேசலாம்“ என்று.

ஆனால் அச்சந்திப்பில் பங்குபற்றிய பலரும் ஒரு தேர்தல் கூட்டைப் பற்றியே அதிகமாகப் பேசினர். அதில் விக்னேஸ்வரனை எப்படித் தலைவராக்குவது? என்பது பற்றியே பேசினர். கடந்த புதன்கிழமை விக்கினேஸ்வரனின் பேச்சிலும் அதுதான் இழையோடுகிறது. ஒரு புதிய ராஜதந்திரப் போரை அவர் முன்னெடுக்கப் போகிறாரா என்று கேட்கத் தோன்றுகிறது.

எப்படியும் இருக்கலாம். ஆனால் ஒரு மக்கள் இயக்கத்தைக் கட்டியெழுப்புவதை விடவும் அதிக பட்சம் ஒரு கட்சியைக் கட்டியெழுப்பி தேர்தல் மூலம் மக்கள் அதிகாரத்தைப் பெற்று ஒரு ராஜதந்திரப் போரை முன்னெடுப்பதே அவருடைய வழிவரைபடமாகத் தெரிகிறது. சரி அப்படி ஒரு கட்சியை உருவாக்குவதாக இருந்தால் இப்போதுள்ள தேர்தல் சட்டங்களின்படி ஒரு புதிய கட்சியைப் பதிய முடியாது. ஏற்கெனவே பதியப்பட்ட ஒரு கட்சியைத்தான் வாங்க வேண்டியிருக்கலாம்.

மேலும் அப்புதிய கூட்டுக்குள் யார் யாரை இணைப்பது? புதன்கிழமை நடந்த கூட்டத்தில் தமிழ்த்தேசிய மக்கள் முன்னணி பங்குபற்றவில்லை. மாற்று அரசியல் ஒன்றுக்கான ஆரம்ப அடித்தளத்தை அக்கட்சியே முதலில் உருவாக்கியது. அதைத்தான் விக்னேஸ்வரன் அதன் அடுத்த கட்ட வளர்சிக்கு எடுத்துச் சென்றார். எனவே யார் மெய்யான மாற்று என்பது தொடர்பிலும் எது சரியான கொள்கைக் கூட்டு என்பது தொடர்பிலும் அக்கட்சிக்கு வேறுபட்ட கருத்துக்கள் இருப்பதாகத் தெரிகிறது. எனவே அக்கட்சி அக்கூட்டத்தில் பங்குபற்றவில்லை. அதே சமயம் ஈ.பி.ஆர்.எல்.எவ் பங்குபற்றியது. அனந்தி பங்குபற்றினார். ஐங்கரநேசன் பங்குபற்றினார். அருந்தவபாலன் பங்குபற்றினார். அனந்தி சில நாட்களுக்கு முன் ஒரு புதிய கட்சியைத் தொடங்கியிருக்கிறார். மிகக் குறைந்த தொகையினரே அத்தொடக்க வைபவத்தில் காணப்பட்டார்கள். அதே சமயம் ஐங்கரநேசன் ஒரு பசுமை இயக்கத்திற்கு தலைவராக உள்ளார்.

> ஒரு மக்கள் இயக்கத்தைக் குறித்து சரியான விளக்கமற்ற அல்லது ஒரு மக்கள் இயக்கத்தை வழிநடத்த முடியாத அளவிற்கு வாழ்க்கை ஒழுக்கத்தைக் கொண்ட தலைவர்கள் தேர்தல் மைய அரசியலை மட்டுமே மீட்சிக்கு உரிய வழியாகக் கருதுகிறார்கள்.

விக்னேஸ்வரனோடு இணைவதற்கு மக்கள் முன்னணி தயார். ஆனால் அக்கூட்டினுள் ஈ.பி.ஆர்.எல். எவ்வையும் புளட்டையும் இணைப்பது தொடர்பில் அவர்கள் முரண்படுகிறார்கள். அதே சமயம் ஈ.பி.ஆர்.எல்.எவ்விற்கும் ஐங்கரநேசனுக்கும் ஒத்து வராது. பொது இடங்களில் பொது வைபவங்களில் ஆளை ஆள் பார்த்து சிரிக்காத ஒரு நிலைமையே உண்டு. இதைவிட அனந்திக்கும், ஐங்கரநேசனுக்கும் ஒத்து வராது. அனந்திக்கும், மக்கள் முன்னணிக்கும் இடையிலும் சுமுகமான உறவு இருப்பதாகத் தெரியவில்லை. இப்படிப் பார்த்தால் விக்னேஸ்வரனின் கூட்டுக்குள் வரக்கூடிய கட்சிகள், பிரமுகர்கள் ஒவ்வொருவரும் ஆளுக்கு ஆள் முரண்பாடுகளோடு காணப்படுகிறார்கள். இவ்வாறு ஆளுக்கொரு திசை பார்க்கும் நவக்கிரகங்களை ஒரு கூட்டுக்குள் அணைத்து வைத்திருப்பதற்கு விக்னேஸ்வரனால் மட்டும்தான் முடியும் என்பதே இங்குள்ள ஒரே சாதகமான அம்சமாகும். சில சமயம் எதிர்காலத்தில் ஒரு கூட்டு முன்னணிக்கான கொள்கை வரைபு எதையாவது உருவாக்குமிடத்து அக்கூட்டின் அடித்தளம் மேலும் பலமாக அமையலாம்.

ஆனால் இப்போதுள்ள களநிலவரத்தின்படி விக்னேஸ்வரனை ஒரு புதிய கட்சியை நோக்கி நிர்ப்பந்தித்தது தமிழரசுக்கட்சிதான். அதைப் போலவே அவரது கூட்டுக்குள் வரக்கூடியவர்களில் புளட் தவிர ஏனையவர்களை விக்னேஸ்வரனை நோக்கித் தள்ளியதும் தமிழரசுக்கட்சிதான். தமிழரசுக்கட்சியின் தவறுகள்தான் இக்கூட்டின் பலம். எனவே இனிவரும் காலம் தமிழ் அரசியல் அரங்கானது இரு துருவ நிலைப்படும் என்பது மட்டும் நிச்சயம்.

அதே சமயம் கடந்த மூன்றாண்டுகளாக தமிழ் மக்கள் பேரவையை ஒரு மக்கள் இயக்கமாக மாற்றப் போவதாக விக்னேஸ்வரன் அடிக்கடி கூறி வந்தார். ஒரு கட்சியைத் தொடங்குவீர்களா என்று கேட்கப்பட்ட போதெல்லாம் ஒரு மக்கள் இயக்கம் என்ற பதிலைக் கூறி தப்பி வந்தார். ஆனால் ஒரு கட்சியை பிரகடனப்படுத்திய அதே நாளில் அம் மக்கள் இயக்கம் தொடர்பில் மிகப் பலவீனமான கருத்துக்களை தெரிவித்துள்ளார். கொட்டும் மழைக்குள் அவர் என்ன சொல்லப் போகிறார் என்று கேட்பதற்காகக் கூடிய ஆயிரத்திற்கும் மேலான மக்களை அவருடைய உரை வாக்காளர்களாகச் சுருக்கி விட்டதா? அதிலும் குறிப்பாக அதே காலைப்பொழுதில் கொழும்பில் காலி முகத்திடலில் சம்பள உயர்வைக் கேட்டு மலையக மக்கள் எதிர்ப்பைக் காட்டினார்கள்.

ஒரு மக்கள் இயக்கத்தைக் குறித்து சரியான விளக்கமற்ற அல்லது ஒரு மக்கள் இயக்கத்தை வழிநடத்த முடியாத அளவிற்கு வாழ்க்கை ஒழுக்கத்தைக் கொண்ட தலைவர்கள் தேர்தல் மைய அரசியலை மட்டுமே மீட்சிக்கு உரிய வழியாகக் கருதுகிறார்கள். ஆனால் கடந்த அரை நூற்றாண்டுக்கும் மேலாக நாடாளுமன்ற அரசியலோ அல்லது கிட்டத்தட்ட கால் நூற்றாண்டுக்கும் மேலாக மாகாணசபை அரசியலோ அல்லது குறிப்பாக கடந்த ஐந்தாண்டுகால வடமாகாணசபை அரசியலோ அல்லது கடந்த மூன்றாண்டு கால தமிழ் மக்கள் பேரவையின் அரசியலோ தமிழ் மக்களை ஏன் விடுவிக்கத் தவறின? உலகம் முழுவதையும் தன்னை நோக்கித் திரும்பிப் பார்க்க வைத்த ஓர் ஆயுதப் போராட்டம் ஏன் இறுதி வெற்றியைப் பெறத் தவறியது? தமிழ் மக்கள் இக்கேள்விகளுக்குரிய சரியான விடைகளை கண்டுபிடித்தால்தான் அல்லது இறந்த காலத்தை காய்தல், உவத்தலின்றி பிரேத பரிசோதனை செய்தால்தான் ஒரு புதிய கட்சியைத் தொடக்கியதன் முழுப் பலனையும் பெறலாம்.



# நிகழ்வுகளின் அரங்கமுரசு

மிஸ் தமிழ் கனடா 2018
Metropolitan Convention Centre
3840 Finch Ave, E Scarorough ON M1T 3T4
Oct 26, Fri 5:00 PM
***
கனடா தமிழ்க் கலைக் கல்லூரி வழங்கும் ஆடல் அரங்கம்
Woburn Collegiate Institute
2222 Ellesmere Rd, Scarborough ON M1G 3M3
Scarborough ON
Oct 27, Sat 5:00 PM
****
யாழ் மத்திய கல்லூரி பழைய மாண-வர் சங்கம் வழங்கும் Central Night – 2018
Markham Convention Centre
2901 Markham Rd, Scarborough ON M1X 0B6
Oct 27, Sat 6:00 PM
***
கனடிய தமிழ் இளைஞர் மேம்பாட்டு மையம் (ஊயவெலுனு) நடாத்தும் விரு விழா 2018
Flato Markham Theatre
171 Town Centre Blvd, Markham ON L3R 8G5
Oct 27, Sun 5:30 PM
***
தமிழீழ அரசியற் துறைப் பொறுப்பா-ளர் பிரிகேடியர் சு.ப. தமிழச்செல்வன் நினைவு நாள்
Nov 02 2018
***
பாராளமன்ற உறுப்பினர் ஹரி ஆனந்-தசங்கரியுடன் ஒரு மாலைப் பொழுது
Scarborough Convention Centre
20 Torhma Place, Scarborough ON M1X 0B3
Nov 2, Fri 6:30 PM
***
நாதஸ்வர தவில் இசை சர்வதேச அமைப்பு நடாத்தும் 21ஆம் ஆண்டு விழா
Sri Sathya Sai Baba Centre of Scarbor-ough
5321 Finch Ave., E. Scarborough ON M1S 5W2
Nov 03, Sat 4:30 PM
***
வி. என். மதிஅழகன் சொல்லும் செய்-திகள் நூல் வெளியீடு
Scarborough Civic Centre
150 Borough Dr, Scarborough ON M1P 4N7
Nov 03, Sat 3:00 PM
***
அனலைதீவு கலாச்சார ஒன்றியம் வழங்கும் அலை ஓசை 14
Port Credit Secondary School
70 Mineola Rd E., Mississauga ON L5G 2E5
Nov 03, Sat 4:30 PM
***
இன்னும் இருக்கிறது இனிய வாழ்வு நூல் சிறப்புப் பிரதிகள் கையளிப்பு
East Town Banquet Hall
2648 Eglinton Ave, E. Scarbrough ON M1k 2S3
Nov 04, Sun 2:30 PM
***
இசைச் சங்கமம் - ஏநநயெடயலயஅ வருஅிடந ழுக ஆரளழை
தமிழிசை கலாமன்ற மண்டபம்
3-1120 Tapscott Rd, Scarborough ON M1X 1E8
Nov 04, Sun 6:00 PM
***
Palm Roots 2018 - ஈழத்தில் வடக்கு கிழக்கில் தமிழ் சமூகத்தின் முன்னேற்றத்திற்கும் அபிவிருத்திக்கும் ஆதரவாக ஏற்பாடு செய்யப்படும் ஒரு தொண்டு நிறுவனத்திற்கு உதவி செய்யும் அடிப்படையிலான புகைப்பட ஏலம்
Scarborough Convention Centre
20 Torhma Place, Scarborough ON M1X 0B3
Nov 04, Sun 6:30 PM
***
பாராளுமன்ற உறுப்பினர் ஹரி ஆனந்-தசங்கரி அவர்களின் Fall Walk in the Rouge Park
Rouge Valley Conservation Centre
1749 Meadowvale Rd, Scarborough ON M1B 5W8
Nov 04, Sun 9:30 AM
***
மின்னல் இசை செந்தில்குமரன் வழங்கும் ஆபுசு 101 இன்னிசைப் பெ-ாழுது
Metropolitan Convention Centre
3840 Finch Ave, E. Scarborough ON M1T 3T4
Nov 09, Fri 7:00 PM
***
தமிழ் மிரர் வருடாந்த விருது விழா 2018
Chinese Cultural Centre
5183 Sheppard Ave, E Scarborough ON M1B 5Z5
Nov 11, Sun 5:00 PM
***
யாழ் பல்கலைக்கழக முன்னாள் மாணவர்களின் குளிர்கால சந்திப்பு
The Estate Banquet Hall
430 Nugget Ave, Scarborough ON M1S 4A4
Nov 17, Sat 5:30 PM
***
தமிழீழ தேசிய தலைவர் மேதகு வேலுப்பிள்ளை பிரபாகரன் - பிறந்த நாள்
Metropolitan Centre
3840 Finch Ave, E. Scarborough ON M1T 3T4
Nov 26 2018
***
தமிழீழ தேசிய மாவீரர் வாரம் ழேஎ 21 வழ ழேஎ 27
தமிழீழ தேசிய மாவீரர் நாள் (தமிழர் தேசிய மாவீரர் நினைவெழுச்சி நாள்)
Markham Fair Ground
10801 McCowan Rd, Markham ON L3P 3J3
Nov 27, Tue 7:00 AM, 1:00 PM & 6:00 PM
****



# Mahavali (L)
## வாழ்வும் அரசியலும்"

அண்மையில் ஸ்ரீ லங்கா பிரதமர் ரணில் விக்கிரமசிங்க மகாவலி ஆற்றினை முல்லைத்தீவுவரை திருப்பும் உத்தேசத்தை பிரகடனப்படுத்தியதை தொடர்ந்து பலவித கருத்துக்கள், ஆர்ப்பாட்டங்கள் இன்னமும் தொடர்ந்து வருவதை காணலாம். இதை தொடர்ந்து

**Mahavali (L)** வாழ்வும் அரசியலும்"

என்ற தலைப்பில் அக்டொபர் 27ம்.திகதி 2018 மாலை 3மணியிலிருந்து 6மணி வரை Scarborough Civic Centre Committee. Room # 2. 150 Borough Drive, Scarborough (McCowan and Ellesmere.y; ஒரு கலந்துரையாடல் நடத்தப்படும்.

**நீங்களும் பங்குபற்றி உங்கள் கருத்தினை மற்றவர்களுடன் பகிர வேண்டுகிறேன்.**

நன்றி

ரட்னம் கணேஷ்

Coordinator, Canadian for Peace Sri Lankan Alliance

# தென்கொரிய மாநாட்டில் கஜேந்திரகுமார் பங்கேற்பு




இராணுவ மயமாக்கலுக்கு எதிரான சர்வதேச மனித உரிமையாளர்கள், மக்கள் செயல்பாட்டாளர்கள் மற்றும் கல்வியலாளர்கள் பங்குபற்றிய கருத்தரங்கில் தமிழர்களைப் பிரதிந்தித்து வப்படுத்தித் தமிழ்த் தேசிய மக்கள் முன்ணியின் தலைவரும், முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினருமான கஜேந்திரகுமார் பொன்னம்பலம் கலந்துகொண்டார்.

இந்தக் கருத்தரங்கு கடந்த 20 ஆம் திகதி தொடக்கம் 22 ஆம் திகதி வரை தென்கொரியாவில் நடைபெற்றது.

இராணுவமயமாக்கலையும் ஏகா திபத்தியத்தையும் எதிர்த்தல், புனிதம் மிக்க எம் தாய் நிலத்தையும் எம் கடலையும் எம் உயிர்ப்பையும் மீளக் கோருதல் எனும் தொனிப் பொருளில் தென் கொரியத் தலைநகர் சியோலில் நடந்த இந்த சர்வதேசக் கருத்தரங்கு தொடரில் தமிழர்களைப் பிரதிநிதித்துவப்படுத்தி தமிழ்த் தேசிய மக்கள் முன்னணியின் தலைவர் கஜேந்திரகுமார் பொன்னம்பலம் கலந்து கொண்டார்.

இதில் பலஸ்தீனம், காஷ்மீர், மியன்மார், இந்தோனேசியா, தென் கொரியா, துருக்கி, தாய்லாந்து, ஜோர்தான், பசுபிக் தீவுகள், மேற்கு பப்புவா நியுகினி போன்ற நாடுகளின் மக்கள் செயல்பாட்டாளர்களும் கலந்து கொண்டனர்.

# விக்கி சம்பந்தனுக்கு கடிதம்



வடக்கு மாகாண முதலமைச்சர் பதவியை முடித்துக் கொண்டு நேற்று புதிய கட்சி ஒன்றை ஆரம்பிக்கும் தனது முடிவை அறிவித்த நீதியரசர் சி.வீ.விக்னேஸ்வரன், நேற்றுக் கூட்டமைப்புத் தலைவர் இரா. சம்பந்தனுக்கு ஒரு கடிதத்தையும் மின் அஞ்சலில் அனுப்பிவைத் தார் என்று அறிய வந்துள்ளது.

தன்னை முதலமைச்சர் பதவிக்குத் தெரிவு செய்தமைக்கும், அந்தப் பதவியில் முழுப் பதவிக் காலமும் தாம் தொடர்வதற்கு வாய்ப்பளித்தமைக்கும் சம்பந்தனுக்கு நன்றி தெரிவித்த நீதியரசர் விக்னேஸ்வரன், தனித்து அரசியல் பயணம் செய்யும் முடிவுக்குத் தான் வந்திருக்கின்றமை பற்றிய தீர்மானத்தையும் தமக்கேயுரிய பாணியில் அந்தக் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கின்றார் என விடயமறிந்த வட்டாரங்கள் தகவல் வெளியிட்டன.

# விக்கியை புறக்கணித்த கஜேந்திரகுமார் கட்சி

வடக்கு மாகாண முன்னாள் முதலமைச்சர் சீ.வி.விக்னேஸ்வரன் "தமிழ் மக்கள் கூட்டணி" என்ற பெயரில் புதிய கட்சி ஒன்றை நேற்று அறிவித்தார். இந்த நிகழ்வில் தமிழ்த் தேசிய மக்கள் முன்னணி பங்கேற்கவில்லை.

சி.வீ. விக்னேஸ்வரன் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பிலிருந்து விலகித் தனியாகப் பயணித்தால் அவரது தலைமையில் இணைந்து பயணிக்கத் தயார் எனத் தமிழ்த் தேசிய மக்கள் முன்னணி முன்னர் அறிவித்திருந்தது.

இந்நிலையில் நேற்று நல்லூ ரில் வைத்து முன்னாள் முதலமைச்சர் தமிழ் மக்கள் கூட்டணி என்ற தனது கட்சியைப் பகிரங்கமாக அறிவித்தார். இந்தக் கூட்டத்தில் ஈ.பி.ஆர்.எல். எவ். பங்குபற்றியிருந்த போதும், தமிழ்த் தேசிய மக்கள் முன்னணி கலந்துகொள்ளவில்லை.

இதேவேளை, ஈ.பி.ஆர்.எல்.எவ். விக்னேஸ்வரன் தலைமையிலான கட்சியில் இணைந்துகொள்வது தொடர்பில் தமிழ்த் தேசிய மக்கள் முன்னணியிடம் உடன்பாடற்ற தன்மை காணப்பட்டது. அதனை அந்தக் கட்சி பகிரங்கமாகவே கூறியிருந்த நிலையில், நேற்று விக்னேஸ்வரனின் புதிய கட்சிஅறிவிக்கும் கூட்டத்தில் தமிழ்த் தேசிய மக்கள் முன்னணி கலந்துகொள்ளாமை சந்தேகங்களை எழுப்பியுள்ளது.

தமிழத் தேசிய மக்கள் முன்னணி விக்னேஸ்வரனின் கட்சியில் இணைந்துகொள்வதற்கு மறுப்பு தெரிவித்துள்ளதாகவும், கட்சியில் இணைந்து கொள்வதற்கு அது நிபந்தனைகளை விதித்ததாகவும் உறுதிப்படுத்தப்படாத தகவல்கள் கடந்த சில தினங்களுக்கு முன்னர் வெளியாகியிருந்தமை குறிப்பிடத்தக்கது.

# தமிழர்களின் எந்த அபிலாஷையையும் ஏற்கப் பேரினவாதம் தயாராகவில்லை

**- யாழ்.பல்கலைக்கழக சட்டபீடத் தலைவர் கு.குருபரன்**

தமிழ்த் தலைமைகள் தங்களுடைய அரசியல் அபிலாஷைகளைக் குறைத்துக் கொண்டாலும் கூட, தென்னிலங்கை பேரினவாத சக்திகள் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை என யாழ். பல்கலைக்கழக சட்டபீடத் தலைவர் கு.குருபரன் தெரிவித்துள்ளார்.

தமிழ் மக்கள் கூட்டணி என்ற புதிய கட்சி வடக்கு மாகாண முதலமைச்சர் சி.வி.விக்னேஸ்வரன் தலைமையில் ஆரம்பித்து வைக்கப்பட்டது. இதில் கலந்துகொண்டு உரையாற்றியபோதே அவர் இதனைக் குறிப்பிட்டார். இது தொடர்பாக அவர் மேலும் தெரிவிக்கையில்,

"கடந்த தேர்தல்களில் தமிழர்க ளின் வாக்களிப்பு முறையானது தமிழ் மக்களுக்கெதிரான ஒடுக்குமுறைகளுக் கும், கட்டமைக்கப்பட்ட இனப்படு கொலை நிகழ்ச்சி நிரலிற்கு எதிராக ஓர் செய்தியினைச் சொல்லுகின்ற விடயமாகவே இருந்துள்ளது.

போருக்குப் பின்னரான காலப்பகுதியில் இடம்பெறும் தேர்தல்களில் தமிழ்மக்கள் என்ன கொள்கையில் நிற்கின்றார்கள் என்பது அல்லது ஆயுதப் போராட்டம் மௌனிக்கப்பட்டதன் பின்னர் தமிழ் மக்கள் என்ன நிகழ்ச்சி நிரலினை வைத்திருக்கின்றார்கள் என்பது



# ஜனாதிபதி, பிரதமர் அவசரமாக சந்திப்பு

ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேன வுக்கும் பிரதமர் ரணில் விக்ரமசிங்க வுக்கும் இடையில் நேற்று முன் தினம் கொழும்பில் முக்கிய சந்திப்பு ஒன்று இடம்பெற் றுள்ளது.

இதன்போது புது டில்லியில் மூடிய அறைக்குள் இந்திய பிரதமர் நரேந்திர மோடியுடன் பேசப்பட்ட விடயங்கள் மற்றும் ஏனைய சந்திப்புகளின் நோக்கங்கள் குறித்து ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவிற்கு பிரதமர் ரணில் விக்ரமசிங்க தெரியப்படுத்தியுள்ளார்.

இந்திய விஜயத்தை நிறைவு செய்து கொண்டு நாடு திரும்பியுள்ள நிலையிலேயே பிரதமர் ரணில் விக்ரமசிங்க ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவை நேற்று சந்தித்து கலந்துரையாடியுள்ளார். இந்த சந்திப்பு ஜனாதிபதி செயலகத்தில் இடம் பெற்றது. ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேன மற்றும் பிரதமர் ரணில் விக்ரமசிங்க மாத்திரம் கலந்துக்கொண்ட இந்த சந்திப்பு சுமார் 45 நிமிடங்கள் வரை நீடித்தது.

இந்திய பிரதமர் நரேந்திர மோடியுடனான சந்திப்பில் பேசப்பட்ட விடயங்களை இதன் போது ஜனாதிபதிக்கு பிரதமர் தெளிவு படுத்தியுள்ளார். மேலும் இந்திய வெளி விவகார அமைச்சர் சுஷ்மா சுவராஜ் மற்றும் அந்நாட்டு உள்நாட்டலுவல்கள் அமைச்சர் ராஜ்நாத் சிங் காங்கிரஸ் தலைவர் ராகுல் காந்தி ஆகியோருடனான சந்திப்புகள் குறித்தும் பேசப்பட்ட விடயங்கள் தொடர்பாகவும் பிரதமர் தெளிவுபடுத்தியுள்ளார்.

மூன்று நாள் உத்தியோகப் பூர்வ விஜயத்தை மேற் கொண்டு பிரதமர் ரணில் விக்ரமசிங்க கடந்த வியாழக் கிழமை இந்தியாவிற்கு விஜயத்தை மேற்கொண்டிருந்தார். இதன் போது இந்திய பிரதமர் நரேந்திர மோடியுடனான சந்திப்பில் பல முக்கிய விடயங்கள் குறித்து பேசப்பட்டுள்ளன. மேலும் இரண்டு நாடுகளின் பிரதமர்களுக்கு இடையில் மூடிய அறைக்குள்ளும் ஒரு சந்திப்பு நடைபெற்றுள்ளது. இந்த சந்திப்பின் போது பிரதமர் ரணில் விக்ரமசிங்க மாத்திரமே கலந்துக் கொண்டதாக அந்த விஜயத்தில் கலந்துக் கொண்டிருந்த அமைச்சர் அர்ஜுண ரணதுங்க தெரிவித்துள்ளார்.

தன்னைக் கொல்ல இந்திய புலனாய்வு அமைப்பான "றோ"சதித் திட்டம் தீட்டியுள்ளதாக ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேன வெளியிட்டதாக வெ ளிவந்த தகவல் தொடர்பாக மூடிய அறைக்குள் பேசப்பட்டதாக இந்திய ஊடகங்கள் தகவல் வெளியிட்டுள்ளன. எனினும் இரு நாட்டு அமைச்சர்கள் மற்றும் அதிகாரிகளுடன் இணைந்து நடத்திய இருதரப்பு பேச்சுக்களின் போது இந்த விவகாரம் பேசப்பட வில்லை .

இதேவேளை உள் நாட்டில் மேற்கொள்ளப்படுகின்ற இலங்கை இந்திய கூட்டுத் திட்டங்களை துரிதப்படுத்தல் மற்றும் தடைகளை நீக்குவது குறித்தும் பேசப்பட்டுள்ளது. குறிப்பாக கொழும்பு துறைமுகத்தின் கிழக்கு முனைய திட்டம்,திருகோணமலை எண்ணை தாங்கி விவகாரம்,பலாலி மற்றும் மத்தள விமான நிலைய அபிவிருத்தி திட்டங்கள் உள்ளிட்ட பல திட்டங்கள் குறித்து இரு தரப்பு பேச்சுக்கள் முன்னெடுக்கப்பட்டுள்ளன.

இந்த அனைத்து விடயங்கள் குறித்தும் பிரதமர் ரணில் விக்ரமசிங்க ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவிற்கு விளக்கமளித்துள்ளார். குறிப்பாக இந்திய பிரதமர் நரேந்திர மோடியுடன் மூடிய அறைக்குள் பேசப்பட்ட முக்கிய விடயங்கள் தொடர்பிலும் இதன் போது பிரதமர் தெளிவுப்படுத்தியுள்ளார்.

# சர்ச்சைகளுடன் நிறைவடைந்த வட மாகாண சபை இறுதிஅமர்வு புதிய மாகாண கீதமும் அறிமுகம்

வடக்கு மாகாண சபை யின் ஐந்தாண்டு பத விக்காலம் இன்று நள் ளிரவுடன் முடிவடைய வுள்ள நிலையில் நேற்று முன்தினம் செவ்வாய்கிழமை நடைபெற்ற கடைசி அமர்விலேயே வடக்கு மாகாண சபையின் கீதத்துக்கு சபையின் அங்கீகாரம் பெறப்பட்டது.

அவைத் தலைவர் சி.வி. கே.சிவஞானம் தலைமையில் கூடிய மாகாண அவையில், வடக்கு மாகாணத்தின் கீதம் சபை உறுப்பினர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அத்துடன் மாகாண கீதமும் இசைக்கப்பட்டது. மாகாண கீதம், இலங்கையின் தேசிய கீதம் போன்று இருமொழிகளில் இருக்க வேண்டும் என்று உறுப்பினர் ஜெயதிலக விடுத்த கோரிக்கையும் அவையினால் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

அதேவேளை, நேற்றைய அமர்வில், வடக்கு மாகாண முதலமைச்சருக்கு உறுப்பினர்கள் பிறந்த நாள் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொண்டனர். அமர்வு சர்ச்சைகளின்றி அமைதியான முறையில் நிறைவடைய வேண்டும் என்ற கோரிக்கை விடுக்கப்பட்ட போதும், நேற்றும் சர்ச்சைகள் இடம்பெற்றன.சபையில் அமைச்சர் அனந்தி சசிதரன் உரையாற்றிய போது சர்ச்சைகள் ஏற்பட்டன. அவர் தமிழ் அரசுக் கட்சியில் இருந்து தெரிவாகியவர். அந்தக் கட்சியில் இருந்து விலகுவதாக அறிவித்த பின்னர்- ஈழத் தமிழர் சுயாட்சிக் கழகம் என்ற புதிய கட்சியைத் தொடங்கிய நிலையிலும், தமிழ் அரசுக் கட்சியின் மூலம் கிடைத்த மாகாணசபை உறுப்பினர் பதவியை வைத்திருப்பதைச் சுட்டிக்காட்டி உறுப்பினர்கள் சிலர் கேள்வி எழுப்பியதால் இந்தச் சர்ச்சை ஏற்பட்டது.



இந்த அமர்வில் முதலமைச்சர், எதிர்க்கட்சித் தலைவர், அமைச்சர்கள் உள்ளிட்டோர் உரையாற்றியாற்றினர். தேநீர் இடைவேளைக்குப் பின்னர் 30 நிமிடங்கள் உரையாற்றிய முதலமைச்சர், தமது பதவிக்காலம் இன்றுடன் முடிவடைந்தாலும், தொடர்ந்தும் வடக்கில் மக்களுடன் மக்களாக இருப்பேன் என்று தெரிவித்துள்ளார்.

அதனை அடுத்து எதிர்க்கட்சித் தலைவர் சி.தவராசா உரையாற்றினார். அப்போது முதலமைச்சருக்கும் அவருக்கும் இடையில் தர்க்கம் ஏற்பட்டது. அதையடுத்து, கல்வி அமைச்சர் சர்வேஸ்வரன் உரையாற்றஆரம்பித்ததும், முதலமைச்சர் சபையை விட்டு வெளியேறினார். இந்த நிலையில் வடமாகாண சபையின் இறுதி அமர்வு நிறைவுக்கு வந்தது.

# போர்க்குற்றச்சாட்டு சுமத்தப்பட்டுள்ளோர் ஐ.நா. பதவிகளை வகிக்க முடியாது



போர்க்குற்றச்சாட்டு சுமத்தப்பட்டுள்ள, இலங்கை இராணுவ அதிகாரியான, லெப்.கேணல் கலன அமுனுபுரவை மாலியில் இருந்து திருப்பி அனுப்பும் ஐ.நா. எடுத்துள்ள முடிவுக்கு, அனைத்துலக மனித உரிமை செயற்பாட்டாளரான, யஸ்மின் சூகா வரவேற்புத் தெரிவித்துள்ளார்.

அனைத்துலக உண்மை மற்றும் நீதி திட்டத்தின் நிறைவேற்றுப் பணிப்பாளரான யஸ்மின் சூக்கா இது தொடர்பாக அறிக்கை ஒன்றை வெளியிட்டுள்ளார். அதில் மேலும் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:

ஐ.நா அமைதிப்படை தொடர்பான திணைக்களத்திற்கு இலங்கை இராணுவ அதிகாரி அமுனுபுர தொடர்பாக நாங்கள் சமர்ப்பித்த ஆவணங்கள், அவருக்கு எதிராக ஐ.நா நடவடிக்கை எடுப்பதற்கு காரணமாக அமைந்துள்ளமை குறித்து நாங்கள் மகிழ்ச்சியடைந்துள்ளோம்.2009 ஆம் ஆண்டு போரில் எத்தனை தமிழர்கள் கொல்லப்பட்டனர் என்பது குறித்து இன்னமும் தெரியாத நிலை காணப்படுகின்றது. இதுவரை எவரும் இதற்காக பொறுப்புக்கூறச் செய்யப்படவில்லை.

ஐ.நா. வின் இந்த சிறிய நடவடிக்கை போரில் பாதிக்கப்பட்டவர்களுக்கு என்றோ ஒரு நாள் தமக்கு நீதி கிடைக்கும் என்ற சிறிய நம்பிக்கையை ஏற்படுத்தும்.

போர்க்குற்றங்களில் ஈடுபட்டவர்கள் இனிமேலும் ஐ.நா. வின் கௌரவமான பதவிகளை வகிக்க முடியாது என்ற வலுவான செய்தியை இந்த நடவடிக்கை தெரிவிக்கிறது என்பது குறித்து எந்தவித சந்தேகமும் இல்லை.

போர்க்குற்றவாளிகள் எதிர்காலத்தில் ஐ.நா. வின் கடுமையான கண்காணிப்பிலிருந்து தப்ப முடியாது என்ற செய்தியையும், இந்த நடவடிக்கை கூறுகிறது.2009 இல் இடம்பெற்றவைகளில் இருந்து தான் விடுவிக்கப்பட்டுள்ளதாக நாடகமாடுவதற்காக, ஐ.நா அமைதிப்படை நடவடிக்கைகளை இலங்கை பயன்படுத்துவதற்கு அனுமதிக்கக் கூடாது.

மூன்று ஆண்டுகளுக்கு முன்னர், ஐ.நா. மனித உரிமை பேரவையில் தீர்மானம் ஒன்றுக்கு இலங்கை இணை அனுசரணை வழங்கியதுடன் கலப்பு நீதிமன்றமொன்றை உருவாக்குவதாகவும், பாதுகாப்பு அதிகாரிகள் மற்றும் ஏனைய அதிகாரிகளை போர்க்குற்றங்களுக்காக விசாரணை செய்வதாகவும் வாக்குறுதி வழங்கியது. எனினும், அரசாங்கம் தனது வாக்குறுதிகளை இன்னமும் நிறைவேற்றவில்லை.

2009 இல் லெப்.கேணல் அமுனுபுரவின் கட்டளை அதிகாரியாக பணியாற்றிய மேஜர் ஜெனரல் சவீந்திர டி சில்வா தற்போது இலங்கை இராணுவத்தின் மனித உரிமை விவகாரங்களுக்கு பொறுப்பாக செயற்படுவதும் ஏற்றுக்கொள்ள முடியாத விடயம் . இவரே .இலங்கை படையினர் வெளிநாடுகளில் மனித உரிமை மீறல்களில் ஈடுபட்டால் அது குறித்து விசாரணை செய்கின்றார். என்றும் அவர் தெரிவித்துள்ளார்.

# "தமிழ் மக்கள் கூட்டணி"

## என்ற பெயரில் அரசியல் கட்சியை ஆரம்பிப்பது எதற்காக? நல்லூர் கூட்டத்தில் விக்கினேஸ்வரன் விளக்கம்



தமிழ் மக்கள் பேரவை விசேட பெருங் கூட்டம் நல்லூர் நடராஜா பரமேஸ்வரி திருமண மண்டபத்தில் நேற்று புதன்கிழமை நடைபெற்ற போது "தமிழ் மக்கள் கூட்டணி" என்ற பெயரில் புதிய அரசியல் கட்சி ஒன்றை தான் ஆரம்பிப்பதன் நோக்கம் என்ன என்பதை சி.வி.விக்னேஸ்வரன் விளக்கினார். பெருந்தொயயான மக்கள் கலந்துகொண்டிருந்த இந்தக் கூட்டத்தில் அவரது வரலாற்று முக்கியத்துவம் மிக்க உரை வருமாறு:

கொட்டுகின்ற மழையையும் பொருட்படுத்தாமல் வடக்கிலும் கிழக்கிலும் இருந்து இத்துணை பெருவாரியாக வந்திருக்கும் உங்கள் ஒவ்வொருவருக்கும் எனது மனப்பூர்வமான நன்றிகள் உரித்தாகுக!

வட மாகாண முதலமைச்சராக எனது அரசியல் பிரவேசத்தை ஆரம்பித்த நான் எனது முதலமைச்சர் பதவிக்காலம் பூர்த்தியாகிவரும் நிலையில் எனது எதிர்கால செயற்பாடுகள் எப்படி இருக்கப்போகின்றன என்பது தொடர்பாக தெளிவுபடுத்தும் நோக்கத்தில் தமிழ் மக்கள் பேரவையினூடாக உங்கள் அனைவரையும் இன்று சந்திப்பதில் மகிழ்ச்சி அடைகின்றேன். கடும் சவால்கள் நிறைந்திருந்த கடந்த 5 வருட காலத்தில் என்னுடன் பணியாற்றிய சக மாகாண சபை உறுப்பினர்கள், அதிகாரிகள், அலுவலர்கள், எனக்கு ஆதரவு நல்கிய நண்பர்கள், தோளோடு தோள் நின்று சேவையாற்றிய தமிழ் மக்கள் பேரவை உறுப்பினர்கள், ஊடகவியலாளர்கள், பல்கலைக்கழக மாணவ மாணவியர்கள், இளைஞர், யுவதிகள் மற்றும் பெரும் ஆதரவும் அரவணைப்பும் அளித்த தாயக மற்றும் புலம்பெயர் மக்கள் ஆகிய சகலருக்கும் எனது நன்றிகளை முதலில் தெரிவித்துக்கொள்கின்றேன்.

ஆழமானநீச்சல் தடாகத்தினுள் பாய்ந்து முழுக இருக்கும் நீச்சல் வீரனின் மனோநிலையில் நான் தற்போது இருக்கின்றேன். ஐந்து வருடங்களுக்கு முன்னரும் இவ்வாறான ஒரு நிலை இருந்தது. குதித்து எழும்பி மீண்டும் ஆழ நீரை நோட்டம் விட்டுக் கொண்டிருப்பது போல் உங்கள் முன் நிற்கின்றேன்.

இலங்கையின் சுதந்திரத்துக்காக சிங்களச் சகோதரர்களுடன் தோளோடு தோள்நின்று போராடியவர்கள் தமிழர்கள். ஆனால், 1920 ஆம் ஆண்டளவில் நாட்டை முழுமையாகத் தமது கட்டுப்பாட்டில் வைத்திருக்கக் கூடிய நடவடிக்கைகளில் சிங்கள அரசியல் தலைவர்கள் ஈடுபட்டமை கவலைக்குரியது. சிங்களத் தலைவர்கள் நாடுமுழுவதிலும் சிங்களவர்கள் ஆதிக்கம் செலுத்துவதற்கு ஏற்றவாறு "ஒரு நபருக்கு ஒரு வாக்கு" (One man one vote) என்ற வழிமுறையைப் பிராந்தியப் பிரதி நிதித்துவம் (Territorial Representation) வேண்டும் என்ற முறையில் ஆங்கிலேயரிடம் கோரினர். அது எமக்குப் பாதிப்பை ஏற்படுத்தும் என்ற விதத்தில் அதை எதிர்த்த கௌரவ சபாபதி அவர்களின் தலைமையிலான வடமாகாண தமிழ்த் தலைவர்கள், தமிழ் மக்களின் வரலாற்று ரீதியான வாழ்விடங்களில் அவர்களது வரலாற்று ரீதியான சுய நிர்ணய ஆட்சிமுறை, அடையாளம் மற்றும் இருப்பு என்பவற்றை பாதுகாக்கும் நோக்கத்தில் இன அடிப்படையிலான பிரதிநிதித்துவத்தை வலியுறுத்தினர். (Communal Representation). மகாவம்ச மனநிலையில் இருந்துகொண்டு தமது அடையாளத்தை நாடு முழுவதிலும் ஏற்படுத்தி சிங்கள இனத்தை வியாபிக்கச் செய்யும் சிங்கள அரசியல் தலைவர்களின் செயற்பாடுகளுக்கும் பூர்வீகக் குடிகள் என்ற அடிப்படையில் "தமிழர்" என்ற அடையாளத்தை பாதுகாக்கும் பொருட்டான தமிழ் அரசியல் தலைவர்களின் செயற்பாடுகளுக்கும் இடையில் அன்று முதல் உருவான "சிங்கள- தமிழ்" இன முரண்பாட்டு நிலை அடுத்துவரும் 2019ம் ஆண்டில் 100 வருடங்களை எட்டப்போகின்றது . இந்த இன முரண்பாடானது அது தோன்றுவதற்கு காரணமான நோக்கங்கள் மற்றும் காரணிகளில் எந்தவித மாற்றமும் இன்றி தொடர்ந்துகொண்டிருக்கிறது.

தமிழ் மக்களின் இந்த "சுய பாதுகாப்பு" போராட்டமானது ஒரு அஞ்சல் ஓட்டமாக பின்னர் தந்தை செல்வா வழியாக முன்னெடுக்கப்பட்டது. இதன்போது ஏற்படுத்தப்பட்ட பல உடன்படிக்கைகள் பௌத்த பேரினவாத சக்திகள் காரணமாக கிழித்தெறியப்பட்டு தொடர்ந்து ஏமாற்றப்பட்டோம். பின்னர் 1970 களின் ஆரம்பத்தில் ஆயுத வழிமுறைகளினூடாக நகர்த்தப்பட்ட இந்தப் போராட்டம் 2009 ஆம் ஆண்டின் பின்னர் ஒரு அரசியல் ராஜதந்திர போராட்டமாக பரிணாமம் பெற்று இன்று எமது கைகளை வந்தடைந்திருக்கின்றது. ஆரம்பித்த நோக்கம் வெற்றி பெறும் வரையில் இந்த அஞ்சல் ஓட்டம் தொடர்ந்து கொண்டிருக்க வேண்டும். இதனை வெற்றியுடன் முடிவுக்கு கொண்டுவரவேண்டிய ஒரு கடமை எமக்குண்டு. இல்லையேல் சாணக்கியமும் பொறுப்பும் ஆற்றலும் உள்ள அடுத்த தலைமுறையினரிடம் அதனை கையளிக்கவேண்டிய தார்மீகப் பொறுப்பு எமக்கு இன்று ஏற்பட்டுள்ளது.

இது ஒரு சுய பாதுகாப்பு போராட்டம். இதன் அடிப்படை விடயங்களில் விட்டுக்கொடுப்பு செய்வதற்கு இந்த போராட்டத்தில் பங்குகொண்டிருக்கும் எவருக்கும் உரிமை இல்லை. அதேசமயம் இந்த 99 வருட கால சுய பாதுகாப்பு போராட்டத்தில் எம்மீது கட்டவிழ்த்து விடப்பட்ட எண்ணற்ற வன்முறைகள், அரசியல் பாகுபாடுகள் மற்றும் இறுதியாக 2009 ஆம் ஆண்டு மேற்கொள்ளப்பட்ட "இன அழிப்பு யுத்தம்" ஆகியவற்றினால் பாதிக்கப்பட்டு 2 இலட்சத்துக்கும் அதிகமான எமது மக்களை நாம் இழந்துள்ளோம். பல ஆயிரம் உயிர்களை தியாகம் செய்துள்ளோம். புலர் ஊனமாகியுள்ளர். சுமார் 15 இலட்சம் மக்கள் சொந்த இடங்களைவிட்டு வெளிநாடுகளுக்கு வெளியேறியுள்ளனர். அதைவிட பெருமளவிலான எமது பூர்வீக நிலங்களை இழந்து கோடிக்கணக்கான சொத்துக்களை இழந்து நெருக்கடியான ஒரு நிலைமையில் இன்று நாம் நிற்கின்றோம். ஆனாலும் நாங்கள் சோர்வடையவில்லை. நம்பிக்கையைத் தளர விடாமல் தொடர்ந்து போராடிக்கொண்டிருக்கின்றோம். ஒன்றைமட்டும் நாம் நினைவில் வைத்திருக்கவேண்டும். அதாவது, நாம் எமது தனித்துவத்தை வலியுறுத்திப் போராடாமல் இருந்திருந்தால் எப்போதோ எமது இனம் இலங்கையில் படிப்படியாக அழிவடைந்துபோயிருக்கும். இவ்வாறு இலங்கை பூராகவும் அழிந்துபோன தமிழ்க் குடும்பங்கள் பற்றி வரலாற்றாசிரியர்கள் பலர் குறிப்பிட்டுள்ளார்கள்.

தமிழ் மக்களுடன் உரிய அதிகாரங்களை பகிர்ந்துகொள்வதன் மூலம் தாங்கள் இழப்பதற்கு எதுவும் இல்லை என்பதைப் புரிந்துகொள்ளாமல் தொடர்ந்தும் தீர்க்க தரிசனம் அற்ற வகையில் சிங்கள பௌத்தத்தை முதன்மைப்படுத்தும் அதே மகாவம்ச மனநிலையுடன்தான் இன்றைய சிங்களத் தலைவர்களும் செயற்படுகின்றார்கள். தொடரும் இந்த இன முரண்பாடு சிங்கள மக்களையும் பாதித்துள்ளது. நாட்டின் பொருளாதாரம் இன்று அதல பாதாளத்துக்குத் தள்ளப்பட்டுள்ளது.

அன்று பொருளாதாரத்தில் எம்மைவிட பின்தங்கி இருந்த சிங்கப்பூர் இன்று நாம் நினைத்தாலும் எட்டமுடியாத உயரத்தில் இருக்கிறது. எல்லா இன மக்களும் அங்கு சமமாக மதிக்கப்படுவதுடன் சம வாய்ப்புக்கள் அவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. மிகச் சிறிய எண்ணிக்கையில் அங்கு வாழ்ந்த தமிழ் மக்கள் சுதந்திரத்துக்காக தோளோடு தோள் நின்று போராடியமைக்கு அங்கீகாரமாகத் தமிழை ஆட்சிமொழி ஆக்கி சிறப்பித்துள்ளார்கள். இதுதான் இன ஐக்கியம். இங்கிருந்துதான் நல்லிணக்கம் ஏற்படும்.

ஒரு இனத்துக்கும் ஒரு மதத்துக்கும் முதன்மை என்ற நிலை இருக்கும் வரை பாரிய முரண்பாடுகள் இந்நாட்டில் இருந்து கொண்டேயிருக்கும். கற்பனைக் கதைகளுடன் எழுதப்பட்ட மகாவம்சத்தை தொடர்ந்தும் வரலாறாக சிங்கள சிறார்களுக்கு பாடசாலைகளின் ஊடாக போதிக்கும் வரையிலும், தமிழ் மக்கள் பூர்வீக குடிகள் என்பதை மறுத்து அவர்கள் வந்தேறுகுடிகள் என்று பொய்யான வரலாற்றைப் போதிக்கும் வரையிலும் இனப்பிரச்சினை இலங்கையில் இருந்துகொண்டேயிருக்கும். இதுவரை காலமும் வட கிழக்கு மாகாண தமிழ் மக்களின் தொன்மை பற்றி எம்மவர் உரையாதிருந்ததால் சிங்கள மக்கள் அதை அறியாதவர்களாகவே இருந்து வந்துள்ளார்கள். இப்பொழுது தான் அவர்கள் அதிர்ச்சி அடையத் தொடங்கியுள்ளார்கள். சிங்களமொழி கி.பி. 6ம் 7ம் நூற்றாண்டுகளிலேயே ஜனித்தது என்று நாம் கூறும்போது அதற்கு முன் வாழ்ந்த துட்டகைமுனு என்ற சிங்கள மன்னன் சம்பந்தமான கதைகள் எல்லாம் கேள்விக்குரியதாக ஆக்கப்படுகின்றன.

பாகுபாடுகள் மற்றும் அடக்குமுறைகளுக்கு எதிரான எமது சுய பாதுகாப்பு போராட்டம் வன்முறை வழிகளில் அடக்கப்பட்டமையும் தொடர்ந்து அடக்குமுறைகள் கட்டவிழ்த்து விடப்பட்டு நாம் ஏமாற்றப்பட்டமையுமே இளைஞர்கள் மத்தியில் விரக்தி நிலையை ஏற்படுத்தி அவர்கள் ஆயுதம் ஏந்திப் போராடக் காரணங்கள் ஆகின என்பது வரலாறு. பல சிங்களத் தலைவர்களே இதனை வெளிப்படையாகக் கூறியிருக்கிறார்கள். 2009 ஆம் ஆண்டு யுத்தம் முடிவடைந்த பின்னர் ஜூலை 2009 இல் ஒரு கருத்தைக் கூறியிருந்தார் தற்போதைய கௌரவ நிதி அமைச்சர் மங்கள சமரவீர அவர்கள் "தமிழீழ விடுதலைப் புலிகளை யுத்த ரீதியாக தோற்கடித்ததன் மூலம் பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டு விட்டதாக எவரேனும் கருதினால் அது முட்டாள்தனமான கருத்தாகவே நோக்கப்பட வேண்டும். 30 வருட காலமாக நீடித்த தேசிய இனப்பிரச்சினைக்கான சமாதானத் தீர்வுத் திட்டமே தற்போது விஞ்சி நிற்கும் தேவை. விடுதலைப் புலிகளின் செயற்பாடுகள் கடுமையான நோயின் நோய்க்குறிகள் மட்டுமே. இன்னமும் நோய்க்கான மருந்து வழங்கப்படவில்லை" என்று கூறியிருந்தார்.

2009 இல் ஆயுத போராட்டம் முடிவுக்கு வந்த போது, தமிழ்த் தலைவர்கள் தனி நாட்டு கோரிக்கையை கைவிட்டபோது, அப்போதைய ஜனாதிபதி மகிந்த ராஜபக்ஸவுக்கு இனப்பிரச்சினையைத் தீர்த்துவைப்பதற்கான பொன்னான சந்தர்ப்பம் கிடைத்திருந்தும் அதனை அவர் பயன்படுத்த விரும்பவில்லை. அவருக்குப்பின்னர் வரலாற்றில் என்றும் இல்லாதவகையில் இரண்டு பிரதான கட்சிகளும் ஒன்றுசேர்ந்து "நல்லாட்சி" அரசாங்கத்தை அமைத்த போதும் இனப்பிரச்சினையை தீர்க்கும் ஒரு அரிய சந்தர்ப்பம் அப்போதைய சிங்களத் தலைவர்களுக்கு ஏற்பட்டது. அவர்களும் அதை செய்யவிரும்பவில்லை. மாறாக, முன்னைய ஆட்சிக்காலத்தில் தமிழ் மக்கள் மீதான இன அழிப்பு யுத்தம் காரணமாக சர்வதேச ரீதியில் ஏற்பட்டிருந்த போர்க்குற்ற விசாரணை மற்றும் பொருளாதார ரீதியாக ஏற்படுத்தப்பட்ட முட்டுக்கட்டைகளை நீக்குவதற்கு ஏற்ற வழிவகையாகவே "நல்லாட்சி" எனும் பெயரை பயன்படுத்தினார்களே தவிர இனப்பிரச்சினையைத் தீர்ப்பதற்கான சந்தர்ப்பமாக இதயசுத்தியுடன் செயற்படவில்லை. ஆகக்குறைந்தது போரினால் பாதிக்கப்பட்ட மக்களின் வாழ்வாதாரத்தை கட்டியெழுப்புவதற்கான வினைத்திறனான ஒரு பொறிமுறையைக்கூட ஏற்படுத்த அவர்கள் முயலவில்லை.

அதிகாரமற்ற வடமாகாண சபை ஊடாக எமக்கு ஒதுக்கப்பட்ட சிறிய அளவிலான நிதியைப் பயன்படுத்தி எம்மால் முடிந்தளவுக்கு எமது மக்களின் துயர் துடைக்கும் பணியைச் செய்துள்ளோம். இது யானைப் பசிக்கு சோளப் பொரி போட்டது போன்றது. இது எமது மக்களைப் பொறுத்தவரை நாம் எதுவும் செய்யவில்லை என்ற தோற்றப்பாட்டையே ஏற்படுத்தியுள்ளது. எமது செயற்பாடுகள் மற்றும் திட்டங்களுக்குப் பல்வேறு முட்டுக்கட்டைகளும் சிக்கல்களும் கடந்த 5 வருட காலங்களில் ஏற்படுத்தப்பட்டன. வட மாகாண சபையில் நேற்று ஆற்றிய இறுதி உரையில் இது தொடர்பில் விளக்கமாகக் குறிப்பிட்டுள்ளேன்.

தமிழ் மக்களின் ஆயுத போராட்டம் இடைக்காலத்தில் இருந்தபோது 1987ஆம் ஆண்டு எம் மீது திணிக்கப்பட்ட ஒரு தீர்வு முறைமையே இந்த மாகாண சபைக் கட்டமைப்பு. பலவீனமான, அதிகாரம் அற்ற இந்த கட்டமைப்பு இனப்பிரச்சினைக்கான ஒரு ஆரம்ப புள்ளியாகக் கூட இருக்க முடியாது என்று எங்கள் தமிழ்த் தலைவர்கள் அன்றே நிராகரித்துவிட்டார்கள். அதன் பின்னர் இனப்பிரச்சினை மேலும் சிக்கலடைந்து ஒரு இன அழிப்பு யுத்தத்தில் முடிவடைந்தது.

15ம் பக்கம் பார்க்க

# "தமிழ் மக்கள் கூட்டணி"

## என்ற பெயரில் அரசியல் கட்சியை ஆரம்பிப்பது எதற்காக? நல்லூர் கூட்டத்தில் விக்கினேஸ்வரன் விளக்கம்

எந்த வகையிலும் எமது மக்களின் தேவைகளைப் பூர்த்திசெய்ய முடியாத ஒரு கட்டமைப்பே மாகாண சபைக் கட்டமைப்பு என்ற யதார்த்தம் தெரிந்திருந்தபோதிலும் பிழையானவர்களின் கைகளில் அதிகாரம் சென்று எமது மக்களுக்கு மேலும் ஆபத்தாக முடியக்கூடாது என்ற காரணத்தினாலேயே தேர்தலில் போட்டியிட்டு வட மாகாண சபையைக் கைப்பற்றினோம். கைப்பற்றிவந்தபின் நாம் எதுவும் செய்யவில்லை என்று கொக்கரிப்போர் யார் என்று பார்த்தால் "பிழையானவர்கள் கைகளுக்கு செல்லக்கூடாது" என்று யாரை அன்று அடையாளப்படுத்தினோமோ அவர்களே அவர்கள் அரசாங்கத்திற்கு மண்டியிட்டு அல்லது பிச்சை கேட்டு ஏன் உங்கள் காரியங்களை நீங்கள் இயற்றவில்லை என்றே கேட்கின்றார்கள். பணிந்துபோய், பகடைக் காயாகி பல நூறு வேலைத்திட்டங்களை ஏன் இயற்றவில்லை என்றே அவர்கள் கேட்கின்றார்கள். அவர்களுக்கு பதில் சொல்வதானால், எமக்கு எமது உரிமைகள் முக்கியம். சலுகைகள் அன்று என்ற படியால்த்தான் எமக்கு எமது வருங்கால நிரந்தரத் தீர்வு அவசியம். இன்றைய ஒரு அடிமைப்பட்ட சொகுசு வாழ்க்கையல்ல.

தீர்வு முயற்சியில் உண்மையான அக்கறை கொண்டு யுத்தத்தினால் பாதிக்கப்பட்ட மக்களின் வாழ்வில் உண்மையான கரிசனை கொண்டிருந்தால் அதிகாரங்கள் கொண்ட "இடைக்கால நிர்வாகத்தை " அரசாங்கம் யுத்தம் முடிந்தகையோடு ஏற்படுத்தியிருந்திருக்கவேண்டும் . ஆனால் அவ்வாறு செய்யவில்லை.

வட மாகாண சபைக்கு மத்திய அரசாங்கம் போதிய நிதியை ஒதுக்காத நிலையில் புலம்பெயர் உறவுகளின் நிதி பங்களிப்பை பெற்று எமது வேலைத்திட்டங்களைச் செயற்படுத்துவதற்காக முதலமைச்சர் நிதியத்தை அமைப்பதற்கு முயற்சித்தபோதிலும் அரசாங்கம் அதற்கு அனுமதிக்கவில்லை. ஏன் வேறு நிதியங்களைப் பாவிக்கவில்லை என்று கேட்கின்றார்கள் சிலர். எமது உரித்தைக் கைவிட்டு விட்டு கரவாக ஏன் பணத்தை வெளிநாடுகளில் இருந்து வருவிக்கவில்லை என்பதே அவர்கள் கேள்வி. கரவான எமது செயல்கள் மத்திய அரசாங்கங்களினால எவ்வாறு எமக்கெதிராகத் திசை திருப்பப்படும் என்பது எமக்குத் தெரியும். தமிழர் புனர்வாழ்வு அமைப்பு என்ற வுசுழு அமைப்பின் நிதிகள் இன்னமும் முடக்கி விடப்பட்டே இருக்கின்றன. முதலமைச்சர் நிதியத்தை வழங்குங்கள் என்று அரசாங்கத்துக்கு கூற வக்கில்லாதவர்களே கரவு முயற்சிகளில் எம்மை ஈடுபடச் சொல்கின்றார்கள். நாங்கள் வேறு நிதியங்களைப் பாவித்து பணத்தை வருவிக்கின்றோம் என்று கண்டால் அவற்றை மூடி விட உடனே நடவடிக்கை எடுக்கும் அரசாங்கம். அண்மையில் பிரித்தானியாவுக்கு சென்ற வட மாகாண ஆளுநர் உதவிகளை செய்யுமாறும் முதலீடுகளை செய்யுமாறும் புலம்பெயர் தமிழ் மக்களிடம் கோரிக்கை விடுத்தமை வேடிக்கையாக இருக்கிறது. அதே ஆளுநர் தான் எமது நிதியத்தை எமக்குக் கிடைக்கவிடாமல் நாடகமாடி வந்தவர்.

ஆவா குழு போன்ற வன்முறை குழுக்களை 3 மாதங்களுக்குள் தன்னால் இல்லாமல் ஒழிக்க முடியும் என்று ஆளுநர் அங்கு தெரிவித்திருப்பது பல சந்தேகங்களை எமக்கு ஏற்படுத்துகிறது. ஆளுநரால் 3 மாதங்களுக்குள் ஆவாக் குழுவை இல்லாமல் செய்ய முடியும் என்றால் ஏன் அதனை அரசாங்கம் ஆளுநர் ஊடாகக் கடந்த 5 வருடங்களில் செய்யவில்லை? அல்லது ஆளுநருக்கும் அரசாங்கத்துக்கும் ஆவா குழுவுக்கும் ஏதாவது தொடர்பு இருக்கின்றதா? என்ற கேள்வி தவிர்க்கமுடியாமல் எழுகின்றது.



ஒரு புறம் வட மாகாண சபையின் செயற்பாடுகளுக்கு ஒத்துழைப்பு வழங்க மறுத்து வந்த அதேவேளை, மறுபுறம் சிங்கள குடியேற்ற திட்டங்களையும் பௌத்த மயமாக்கலையும் தமிழ் மக்களின் கடும் எதிர்ப்புக்கள் மத்தியிலும் நல்லாட்சி அரசாங்கம் முன்னெடுத்து வந்துள்ளது. இதற்கு ஆளுநர் உடந்தையாக இருந்துள்ளார்.

இராணுவத்தை வடக்கில் இருந்து அகற்ற மறுத்து வருவதுடன், போதைப்பொருள் கடத்தல் மற்றும் வன்முறை கும்பல்களின் செயற்பாடுகளைக் கட்டுப்படுத்துவதிலும் அசட்டையீனமாக இருந்துவருகிறனர் அரசாங்கமும் ஆளுநரும். அரசாங்கத்தின் செயற்பாடுகள் இப்படி இருக்கும்போது, தமிழ் தேசியக் கூட்டமைப்போ இந்த அரசாங்கத்தை நல்லாட்சி அரசு என்று சர்வதேச சமூகத்துக்கு நற்சான்றிதழ் கொடுத்துவருவதுடன், தமிழ் மக்களுக்கு ஒரு தீர்வை வழங்கும் என்றும் ஏமாற்றி வருகிறது. முதலில் 2016 என்றார்கள். பின்னர் 2017 என்றார்கள். இப்பொழுது 2018 என்கின்றார்கள். விந்தையிலும் விந்தை இந்தச் செயல்.

நிலைமைகள் இவ்வாறு நெருக்கடி மிகுந்ததாகவும் சிக்கலாகவும் இருக்கும் ஒரு சூழ்நிலையில்தான் முதலாவது வட மாகாண சபையின் 5 வருட காலம் முடிவுக்கு வந்துள்ளது.

எனது முதலமைச்சர் பதவிக் காலத்தின் பின்னர் எனது செயற்பாடுகள் எப்படி இருக்கமுடியும் என்பது தொடர்பில் 4 தெரிவுகள் இருப்பதாகக் கூறிவந்தேன்:
1.அமைதியாக வீட்டுக்குச் செல்லுதல் 2. ஒரு கட்சியுடன் இணைந்து தேர்தலில் நிற்பது 3. ஒரு புதிய கட்சியை ஆரம்பித்து செயற்படுவது. 4. ஒரு மக்கள் இயக்கத்திற்கு தலைமை தாங்குவது, என்பவையே அவை.

முதலாவது வழியை நான் தெரிவு செய்தால் எனது குடும்பத்தினர் நன்மையடைவதுடன் நானும் எனது ஓய்வுகாலத்தை அமைதியாகக் கொண்டு செல்லமுடியும். எனது உடல் நிலை சீரடையும். அப்படியான ஒரு முடிவை நான் எடுப்பதானால், நான் அரசியலுக்கே வந்திருக்கக் கூடாது. அதுவே அறமாக இருந்திருக்கும். அரசியலுக்கு வந்த பின்னர் இத்தகைய ஒரு முடிவை எடுப்பது நான் தொடர்ந்து ஆற்றவேண்டிய பல பணிகளை ஆற்றாமல், பூர்த்திசெய்யவேண்டிய பல பணிகளை பூர்த்திசெய்யாமல் என்னை நம்பிய மக்களை நட்டாற்றில் விட்டுவிட்டு எனது நலன்களை முதன்மைப்படுத்தி செல்வதாகவே அமையும். இது மனச்சாட்சிக்கு விரோதமானது என்று உணர்கின்றேன். மேலும் என்னை ஒரு இடர் நிலையில் இருந்து காப்பாற்றிய எம் மக்களுக்கு "நான் உங்களுடன் இருப்பேன்" என்று அன்று கூறிய வாக்கு பொய்த்துவிடும். அதனால் இத்தகைய ஒரு தெரிவை என்னால் எடுக்க முடியவில்லை.

நான் எந்த ஒரு கட்சியையும் சார்ந்தவன் அல்ல. தமிழ் தேசியக் கூட்டமைப்பின் பொது வேட்பாளராகவே கடந்த தேர்தலில் போட்டியிட்டேன். ஆனால் என்னை ஒரு பொம்மையாக வைத்து அரசியலை நடத்துவதற்கு அதன் தலைவர்கள் எதிர்பார்த்திருந்தார்கள். அதற்கு என்னால் இடமளிக்கமுடியவில்லை. எனக்கும் தமிழ் தேசிய கூட்டமைப்பு தலைமைக்கும் இடையே கடந்த 4 வருடங்களில் இடைவெளி பெரிதும் அதிகரித்துள்ளது. இது நான் பெரிது நீ பெரிது என்ற மனப்பான்மை காரணமானதாகவோ அல்லது தலைமைத்துவப்போட்டி காரணமாகவோ ஏற்படவில்லை. மாறாக, எமது மக்களின் பிரச்சினைகளுக்கான தீர்வு தொடர்பில் கோட்பாடு ரீதியாகவும் அணுகுமுறை ரீதியாகவும் ஏற்பட்ட முரண்பாடுகள் காரணமாகவே இந்த வேறுபாடுகள் ஏற்பட்டன. ஆகவே தமிழ் தேசிய கூட்டமைப்பின் சார்பில் மீண்டும் போட்டியிடுவதை என்னால் நினைத்தும் பார்க்க முடியவில்லை. நான் கைப்பொம்மையாக இருக்க சம்மதிக்காதவரை எனக்கு மீண்டும் இடமளிக்க அவர்களும் தயார் இல்லை. பல நண்பர்கள் ஒற்றுமை அவசியம் என்பதால் தமிழ்த் தேசிய கூட்டமைப்பில் இருந்தே போட்டியிட வேண்டும் என்றார்கள். கொள்கையில் திடமாக இல்லாது முன்பு "துரோகிகள்" என்று வர்ணித்தவர்களின் வழித்தடத்திலேயே இப்பொழுது பயணம் செய்யும் தமிழ்த் தேசிய கூட்டமைப்பில் எனக்கென்ன வேலை என்று கேட்டு அவர்கள் வாய்களை அடைத்துவிட்டேன். அதனால், தமிழ்தேசிய கூட்டமைப்புடன் இணைந்து போட்டியிடுவது சாத்தியமற்ற ஒன்று.

தமிழ் மக்கள் பேரவையுடன் இணைந்து பணியாற்றும் ஏதாவது ஒரு அரசியல் கட்சியில் இணைந்து போட்டியிடுவது எமக்கிடையிலான ஒற்றுமையை சீர்குலைப்பதாக அமைந்துவிடும். "ஏன் இந்தக் கட்சி?" "மற்றக் கட்சி கூடாதா?" என்றெல்லாம் போட்டியும் பொறாமையும் மேலோங்கும். ஆகவே இரண்டாவது தெரிவும் சாத்தியம் அற்றது.

எனது தனிப்பட்ட நலனில் அக்கறைகொண்ட நண்பர்கள் பலரும் நான் முதலாவது தெரிவை அல்லது நான்காவது தெரிவையே எடுக்க வேண்டும் என்றே ஆலோசனை கூறி வந்துள்ளார்கள். உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் வாழ்கின்ற தமிழ் மக்களை ஒன்றிணைத்து ஒரு மக்கள் இயக்கத்துக்கு தலைமை தாங்கும் நான்காவது தெரிவு சிறந்த ஒரு தெரிவாக இருந்தாலும் அதில் சில பலவீனங்கள் இருக்கின்றன என்பதை உணர்ந்துள்ளேன். குறிப்பாக, மக்கள் இயக்கப் போராட்டங்கள் சாத்வீக கோட்பாடுகளின் அடிப்படையிலானவை. சாத்வீக வழிமுறைகளில் ஆரம்பித்து வன்முறைகளால் ஒடுக்கப்பட்ட தமிழ் மக்களின் போராட்டமே இன்று அரசியல் ராஜதந்திர போராட்டமாக பரிணாமம் பெற்றுள்ளது.

ஜனநாயக தேர்தல்களில் பங்குபற்றி உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் அரசியல் , ராஜதந்திர மற்றும் சர்வதேச உறவு செயற்பாடுகளில் ஈடுபட்டு எமது மக்களின் சட்ட ரீதியான பிரதிநிதிகளாக அவர்களின் கோரிக்கைகளுக்கு அங்கீகாரம் பெறுவதும் ஆதரவைப் பெறுவதுமே இந்த அரசியல் ராஜதந்திர போராட்டத்தின் அடிப்படை. இதனை உணர்ந்துதான் 1990 களின் ஆரம்பத்தில் வெறும் ஒன்பது வாக்குகளுடன் ஒரு தமிழ் அரசியல் கட்சியின் உறுப்பினர்கள் பாராளுமன்றத்துக்குத் தெரிவாகும் வகையில் தேர்தலை நடத்திவிட்டு அவர்களை தமிழ் மக்களின் பிரதிநிதிகளாக எடுத்துக்காட்டி தமிழ் மக்களின் போராட்டத்தை பயங்கரவாதப் போராட்டமாக சித்தரித்து மழுங்கடிக்கும் செயற்பாடுகளை அரசாங்கம் வெற்றிகரமாக மேற்கொண்டது. அதே "ஒன்பது வாக்கு" கட்சியின் ஒரு முக்கிய உறுப்பினர்தான் நாம் எதுவுமே செய்யவில்லை என்று இன்று கூச்சல் போடுகின்றார்.

ஜனநாயக தேர்தல்கள் மூலமாக மக்களின் அபிலாஷை களை சர்வதேச சமூகத்துக்கு கொண்டுசென்று அவற்றுக்கு அங்கீகாரம் பெற்றுக்கொள்ளும் முக்கியத்துவத்தை உணர்ந்துதான் கசப்புணர்வுகள் பகைமைகளை மறந்து தமிழ் தேசிய கோட்பாட்டின் அடிப்படையில் பழம்பெருந் தமிழ் அரசியல் கட்சிகளையும் முன்னாள் ஆயுத போராட்ட அமைப்புக்களையும் ஒன்றிணைத்து தமிழ் தேசிய கூட்டமைப்பு உருவாக்கப்பட்டது. ஆனால், இன்று தமிழ் தேசிய கூட்டமைப்பு தமிழ் தேசிய கோட்பாடுகளை கைவிட்டு தடம் புரண்டு "ஒன்பது வாக்குக் கட்சியுடன் கைகோர்த்து நிற்கின்றது. பொருளாதார அபிவிருத்தி ஏன் செய்யவில்லை என்று துணிந்து கேட்டுக் கொண்டிருக்கின்றது. அரசியல் தீர்வின் அத்தியாவசியத்தை அறியாமல் அரற்றிக் கொண்டிருக்கின்றார்கள்.

நேற்றைய எனது உரையில் குறிப்பிட்டிருந்தபடி, நான் 2013 ஆம் ஆண்டு வட மாகாண சபைதேர்தலில் போட்டியிடும் போது எமது மக்கள் கொடிய யுத்தம் ஒன்றினூடான இன அழிப்பை சந்தித்து மிகவும் பலவீனமான நிலையில் நொந்துபோய் இருந்தனர். ஆனாலும், தமிழ்த் தேசியத்தின் அடிப்படைக் கொள்கைகளான இணைந்த வடக்கு கிழக்கில்

34ம் பக்கம் பார்க்க



# கனடிய நயினாதீவு நாகம்மாள் கோவில் அங்கத்தவர்களுக்கான அறிவித்தல்

கடந்த 14-10-2018 ம் திகதி ஞாயிற்றுக்கிழமை கூட்டப்பட்ட பொதுக்கூட்டத்திற்கு ஆலய கலாச்சார மண்டபம் அனுமதி மறுக்கப்பட்டதுடன் 21-10-2018 ம் திகதி ஞாயிற்றுக்கிழமை பொதுக்கூட்டம் நடைபெறும் என ஆலயத்தில் சமுகமளித்திருந்த பொதுச்சபை அங்கத்தவர்களுக்கு செயலாளரால் உறுதியளிக்கப்பட்டது. தற்போது இப்பொதுக்கூட்டம் காலவரையறையின்றி ஒத்திவைக்கப்பட்டுள்ளதாக செயலாளரால் பத்திரிகைகள் வாயிலாக அறிவிக்கப்பட்டுள்ளது. [illegible] 28-10-2018 ஞாயிற்றுக்கிழமை காலை 10:00 மணிக்கு New Kingdom Banquet Hall, 2900 Markham Road, (Markham & Mc Nicoll Ave) Scarborough இல் பொதுக்கூட்டம் நடைபெறும் என்பதை அனைத்து அங்கத்தவர்களுக்கும் தெரிவித்துக்கொள்கிறோம். நன்றி.

இறைபணியில் பொதுச்சபையினர்.

1. அருணாசலம் சதானந்தன் 416- 292 5737
2. முத்தையா சிவானந்தராசா 416- 200 4224
3. கணபதிப்பிள்ளை குலசிங்கம் 416- 317 9413
4. சிவராம் சிவகுமார் 647- 892 1418
5. நாகேசு ஜெயராசசிங்கம் 416- 268 7943
6. குணரட்ணம் சத்தியானந்தம் 647- 886 6904
7. நமசிவாயம் தயானந்தன் 647- 829 8354
8. யோகநாதன் பிரகாஷ் 416- 918 7343
9. மகாலிங்கம் மதிவாணன் 647- 287 9979
10. சச்சிதானந்தன் மோகனராஜன் 416- 803 8316
11. கிருஷ்ணதாசன் அஜந்தன் 416- 930 1016

## Important announcement of Nainativu Nagamal Kovil of Canada to its members !!!

On October 14th, 2018, members of the temple were denied to use the cultural center of the temple to conduct a meeting for the betterment of the temple and to resolve any current issues that are pending. Since this date was denied, the secretary of the temple promised to have a public meeting to be held on October 21st, 2018 at the cultural center of Nainativu Nagamal Kovil of Canada. Relying on the words and promise of the secretary, members of the temple and public showed up at the temple today (October 21st, 2018) for the meeting that was promised by the secretary of the temple. Once again, everyone was left disappointed because the meeting has been cancelled with short notice (via newspaper) by the secretary. Since this is an ongoing battle with the secretary at the temple and there many issues that need to be addressed for the growth and betterment of the temple, we as members of the temple have arranged a General Meeting to be held on October 28th, 2018 at 10:00am at New Kingdom Banquet Hall, 2900 Markham Road, Scarborough. With this notice, we humbly ask the members of the temple to attend this important meeting so that we can put an end to any issues that are a major concern at this present moment. Thank you and we sincerely hope to see everyone at this meeting.

General Members

1. Arunasalam Sathananthan
2. Muthaiah Sivananthan
3. Kanapathipillai Kulasingam
4. Sivaram Sivakumar
5. Nagesu Jeyarajasingam
6. Kunarathinam Sathiyananthan
7. Namasivajam Thayananthan
8. Yoganathan Biragash
9. Mahalingam Mathivanan
10. Sachithananthan Mohanarajan
11. Krishnathasan Ajanthan



# பிரகதி சித்தா மூலிகைச் சிகிச்சை நிலையம்

## OVER 10,000 YEARS OLD TRADITIONAL SYSTEM OF TAMIL MEDICINE.

### வர்ம முறையிலும், மருந்தில்லா மருத்துவ முறையிலும் சிகிச்சை அளிக்கப்படும்.

அன்னையின் பிரகதி சித்தா மூலிகை சிகிச்சை நிலையம். இது ஒரு பாரம்பரிய பரம்பரை ராஜ வைத்தியசாலை. இந்தக் கால மருத்துவ விஞ்ஞானிகளைப் போல ஆதிகால மருத்துவ விஞ்ஞானிகளே நம் சித்தர் பெருமக்கள். தவம்,ஞானம் எனப் பல வழிகளைக் கண்டறிந்தார்கள். அதில் ஒரு பங்கு தான் வைத்தியம். வைத்தியமுறைகள் பலவகைகளாக இருந்தாலும், அவர்கள் மூலிகைகளைக் கொண்டு பல வியாதிகளைக் குணமாக்கியும், ஆராய்ச்சி செய்தும் சுவடிகளில் எழுதியும் வைத்திருக்கிறார்கள். அதுமட்டுமல்லாமல் சீடர்களுக்கும், சில நல்ல உள்ளம் கொண்டவர்களுக்கும் கற்றுத் தந்தும் இருக்கிறார்கள் மக்களின் நலன் கருதியே சித்தர்கள் இவ்வாறு செய்திருக்கிறார்கள். பல மருத்துவ முறையில் வந்திருக்கும் வியாதிக்கு மருந்தில்லை. ஆனால் சித்த மூலிகை வைத்தியத்தில் அப்படியில்லை. பல வியாதிகளுக்கு மருந்து இருக்கிறது. இன்னமும் மருந்திருக்கும் அளவுக்கு வியாதிகள் உலகத்தில் உருவாகவில்லை. எப்படிச் சொல்கிறேன் என்றால் ஒரே ஒரு மூலிகை 30 விதமான வியாதிகளைக் குணப்படுத்தும் அளவுக்கு உள்ள மூலிகைகளும் உண்டு. அதைப் பரம்பரையாக கையாண்டு வந்து கொண்டிருந்த பரம்பரையில் வந்ததே அன்னையின் பிரகதி சித்தா மூலிகை சிகிச்சை நிலையம். நரம்புத் தளர்ச்சி, முடக்கு வாதம்,பக்கவாதம், சிறுநீரகம், சொரியாஸிஸ், கர்ப்பப்பைக் கட்டி, ஆண் பெண் மலட்டுத் தன்மை, குழந்தையின்மை, அல்சர், மூட்டுவலி, இருதயம் சம்பந்தமான நோய்கள், மூளைக் கட்டி, ரத்தசோகை,சர்க்கரை வியாதி, தலைமுடி கொட்டுதல், மாலைக் கண்நோய், காது, ரத்த அழுத்தம், கொலஸ்ட்ரால்,வெண் குஷ்டம், முள்ளந்தண்டுவட வலி, மூட்டு வலி, மூட்டுத்தேய்மானம், மஞ்சள் காமாலை, வெள்ளைப்படுதல், அனைத்து விதமான புற்று நோய்கள், முரசு கரைதல், தூக்கமின்மை, மூலம், பௌத்திரம், நரம்பு வாதம் (Varicose Vein) மாறாத படுக்கைப்புண், தீப்புண், ஒற்றைத் தலைவலி, முடி உதிர்தல், தைராய்டு, உடல் எடையை கூட்ட, அல்லது குறைக்க, உடலில் ஏற்படக் கூடிய அனைத்து வியாதிகளையும் அன்னையின் பிரகதி சித்தா மூலிகை சிகிச்சையில் பரிபூரணமாக குணப்படுத்திட முடியும். உணவே மருந்து, மருந்தே உணவாக கடைப்பிடிக்கப்படுகிறது.

வியாதிகளில்லாத உலகை உருவாக்க விரும்புகிறது

**புற்று நோயாளர்களுக்கு ஒரு அறிவிப்பு.**

எந்த வகையான புற்று நோயாக இருந்தாலும், நோயாளி வாயால் உணவு உட்கொள்ளக் கூடியதாக இருக்கும் போதும், உறுப்புகளை வெட்டி அகற்ற முன்னரும், நாம் உங்களுக்கு உதவ முடியும். உங்களுக்கு விதிக்கப் பட்ட வாழ்க்கையை முழுமையாக வாழ நாம் உங்களுக்கு உதவ முடியும்.

சித்தர்களின் பழங்கால முறையில் ரசமணி, ரசலிங்கம் செய்து தரப்படும்.

**சித்தர்களின் பழங்கால முறையில் ரசமணி, ரசலிங்கம் செய்து தரப்படும்.**

**PREMI.S**

பாரம்பரிய சித்த வைத்தியர் (ராஜவைத்தியம்), இரசவாதி

Hereditary Siddha Practitioner (Royal Physician Treatment),
Spagyric Alchemist (CAN)
Siddha System of Medicine (IND), DHMS (IND),
Natural Medicine Practitioner (CAN)

**Proudly Sponsored By:**
Yogic Health & Food Bank
www.sivarppanamfoundation.org

**நிவாரணம் பெற அழையுங்கள்**

**PHONE: +1 (647) 278 - 3100**

Email: pragatishc@gmail.com | Web: www.pragatisiddha.com

880 Markham Rd, Scarborough ON M1H 2Y2



# COMPLETE

## Janitorial Services & Supplies




**We Sell Automotive Garage & Detailing Supplies**

- Car Wash Soap
- Engine Shampoo
- Mag Wheel & Rim Cleaner
- Tire & Vinyl Dressing
- Interior Shampoo
- Rust Proofing
- Garage Floor Cleaner

**Janitorial Services & Supplies**

- Toilet Paper & Paper Towel
- Garbage Bages
- Cleaning Liquid
- Cleaning Utensilts
- Food Containers
- Brooms, Mops, Dust Mops, etc.

**THE BEST PRICE FOR BULK AND SINGLE PURCHASES, AMAZING PRICES FOR QUALITY PRODUCTS**



3480 McNicoll Ave., Unit 22, Scarborough, ON, M1V 5A7
Tel: 416.754.9676 | Cell: 416.303.5682 | Fax: 416.754.7795
Email: thavakandasamy@gmail.com
www.completejss.com

---

YOUR DREAMS. YOUR LIFE. SIMPLIFIED.

DFSIN, BECAUSE EVERYTHING IS POSSIBLE.

Desjardins Financial Security Independent Network



- Life Insurance
- Disability Insurance
- Mortgage Insurance
- Super Visa
- Estate Planning
- Group Plans
- R.R.S.P
- Long Term Care
- Segregated Funds

## LIFE & HEALTH INSURANCE ADVISOR





**Desjardins**
Financial Security

40 Winges Road Unit 09
Woodbridge ON L4L 6B2
Tel: 905 265 7393

**Yogarajah Kathirgamar**
**Cell: 416.917.7263**

---

# நியூ ரங்கனாஸ் கோம் பில்டேர்ஸ்
# NEW RANGANAS HOME BUILDERS




இலங்கை திருநாட்டில் (யாழ்ப்பாணத்தில் மட்டும்)
20 வருட அனுபவம் வாய்ந்த வீட்டு நிர்மாணம்
வீடு கட்டிடம் காணி வாங்க விற்க சகல
வகையான பரிமாற்றங்களுக்கும்
(நியூ ரங்கனாஸ் கோம் பில்டேர்ஸ்)

புதிய காணி வீடு விற்பனைக்கு
யாழ்ப்பாணம் திருநெல்வேலி சந்தைக்கு அருகாமையில்
புதிய வீடு 2 விற்பனைக்கு மற்றும்
யாழ்ப்பாண நகரில் 50 பரப்பு
காணி விற்பனைக்கு உண்டு



**647-702-2159**

**6055 Steeles Ave E Unit C102, Scarborough, ON., M1X 0A7**


ஈழமுரசு

# நாடகப் பெருவிழா - 2018
# நிகழ்வுகளின் தொகுப்புக்கள்



























# மரண அறிவித்தல்

| தோற்றம் | | மறைவு |
|---|---|---|
| 16 | | 21 |
|  |  |  |
| 11 | | 10 |
|  | |  |
| 1931 | | 2018 |

## அமரர் திரு சிவகுரு நடராசா

(கச்சாய் நடராசா, புத்தூர் சுண்ணாக வீதி நடராசா கடை உரிமையாளர்)

யாழ். புத்தூர் மேற்கு சிவன் கோயிலடியைப் பிறப்பிடமாகவும், கொழும்பு, கனடா ஆயசமாயஅ ஆகிய இடங்களை வதிவிடமாகவும் கொண்ட சிவகுரு நடராசா அவர்கள் 21-10-2018 ஞாயிற்றுக்கிழமை அன்று கனடாவில் இறைவன் திருவடி எய்தினார்.

அன்னார், காலஞ்சென்றவர்களான சிவகுரு சின்னதங்கம் தம்பதிகளின் மூத்த மகனும், காலஞ்சென்ற வெற்றிவேல், கண்மணி தம்பதிகளின் அன்பு மருமகனும்,

காலஞ்சென்ற வஷஸ்திராதேவி அவர்களின் அன்புக் கணவரும்,

சாமினி(கனடா), சுபாசினி(கனடா), சுதாகர்(கனடா), சுரேஸ்(கனடா), றமேஸ்(ஜெர்மனி) ஆகியோரின் பாசமிகு தந்தையும்,

கருணாநிதி(கனடா), சந்திரகுமார்(கனடா), சந்திராதேவி(கனடா), வாசுகி(கனடா), வசந்தி(ஜெர்மனி) ஆகியோரின் பாசமிகு மாமனாரும்,

காலஞ்சென்றவர்களான நாகம்மா, சீவரட்ணம், சின்னம்மா மற்றும் சிவசுப்பிரமணியம் ஆகியோரின் அன்புச் சகோதரரும்,

காலஞ்சென்றவர்களான கந்தசாமி, காசிப்பிள்ளை, ஜெயலஷ்மி, இராமசந்திரன்(இளைப்பாறிய இலங்கை வங்கி முகாமையாளர்), லீலாதேவி(அவுஸ்திரேலியா), ஹரிசந்திரன்(ஜெர்மனி) ஆகியோரின் பாசமிகு மைத்துனரும்,

சிவதேவி(தமிழீழம்), காலஞ்சென்ற சிவநாதன்(ஜெர்மனி), பத்மநாதன்(டென்மார்க்), ஈஸ்வரி(கொழும்பு), காலஞ்சென்ற யோகநாதன்(தமிழீழம்), பாலசுந்தரம்(தமிழீழம்), பாஸ்கரன்(ஜெர்மனி), குணசேகரன்(தமிழீழம்), மஞ்சலிங்கம்(தமிழீழம்), சீதாலட்சுமி(தமிழீழம்), சுகந்தி(தமிழீழம்), சுரேந்திரன்(லண்டன்), தர்சினி(கொழும்பு), நிரஞ்சன்(லண்டன்), கரன்(ஜெர்மனி), சுஜீவன்(ஜெர்மனி) ஆகியோரின் அன்பு மாமனாரும்,

மங்களேஸ்வரி(டென்மார்க்), தேவகுமார்(கனடா), இராசகுமார்(சுவிஸ்), சதரூபி(தமிழீழம்), பிரதீபன்(அவுஸ்திரேலியா), ஜெயரூபன்(அவுஸ்திரேலியா), வினோதா(அவுஸ்திரேலியா) ஆகியோரின் அன்புப் பெரியப்பாவும்,

சுகன்யா(லண்டன்), திலக், தக்ஷன், தினேஷ்குமார், சுதர்ஷன், அனுஜனன், அஸ்வின்(கனடா), காயத்திரி, செந்தூரன், காலஞ்சென்ற சாம்(ஜெர்மனி), செல்வமுருகன்(லண்டன்), யாழினி(கனடா), சுகர்னா(இந்தியா), றனிபா(கனடா), அயூரன், ஆரணன், அன்பரசி(ஜெர்மனி), அபிரா(டென்மார்க்), தேவதீசன், சுதர்சனா, திவாகரன், சர்மினா(தமிழீழம்), ஜெனிசா, மதுஸ்(கனடா), நிகேதன், மதுரிகா, சித்தனா(தமிழீழம்), கயாஸி, கயூரன், யதூசன்(ஜெர்மனி), சிவதுதி, துதிகரன், தர்சனன், லக்சனா, சர்மிளன்(தமிழீழம்), சுகன்யா(கென்யா), கஜனி(கென்யா), நிவிஷன்(லண்டன்), காலஞ்சென்ற லக்கிஷன்(லண்டன்), கிஷானி, அபிஷன், அக்ஸாயினி, தரண்ணா, திவ்யன்(அவுஸ்திரேலியா), ஜனிஸ், தியா, எலியா, எமிலியா(ஜெர்மனி) ஆகியோரின் அன்புப் பேரனும்,

ரூபினி, சாரங்கன், ஜெயனி(லண்டன்), அக்ஷரா, சிவேஷ், ஹரிஷ்(கனடா) ஆகியோரின் அன்புப் பூட்டனும் ஆவார்.
அன்னாரின் பூதவுடல் சனிக்கிழமை (27/10/2018) மாலை 5 மணி தொடக்கம் இரவு 9 மணி வரையும், ஞாயிற்றுக்கிழமை (28/10/2018) காலை 8 மணி தொடக்கம் காலை 9:30 வரையும் பார்வைக்கு வைக்கப்பட்டு, காலை 9:30 மணி தொடக்கம் காலை 11:30 வரைக்கும் Chapel Ridge Funeral Home & Cremation Centre, 8911 Woodbine Ave, Markham, ON L3R 5G1, Canada. வில் கிரியைகள் நடைபெற்று, ஞாயிற்றுக்கிழமை அன்று மதியம் 12:00 மணி தொடக்கம் பி.ப 12:30 வரைக்கு Highland Hills, 12492 Woodbine Ave, Gormley, ON L0H 1G0 ல் தகனம் செய்யப்படும்.

இவ் அறிவித்தலை உற்றார், உறவினர், நண்பர்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கின்றோம்.
தகவல்- குடும்பத்தினர்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுதாகர்(தினேஷ்) | - கனடா | - 16472848182 | தேவகுமார்(யூியெ)சுகி | - கனடா | - 14166170390 |
| சந்திரா | - கனடா | - 19054727891 | திலக் யாழினி | - கனடா | - 14168263320 |
| ஷாமினி கருணாநிதி | - கனடா | - 16474275876 | தக்ஷன் | - கனடா | - 16479865876 |
| சந்திரகுமார் சுபாசினி | - கனடா | - 14167238396 | செல்வமுருகன் சுகன்யா | - பிரித்தானியா | -447930354041 |
| சுரேஸ் வாசுகி | - கனடா | - 14162946098 | தினேஷ் | - கனடா | - 16477017995 |
| ரமேஷ் வசந்தி | - ஜெர்மனி | - 491624385849 | சுதர்ஷன்- றனிபா | - கனட | - 16472968396 |

# ஒரு தலைப்பட்சமாக செயற்படுகிறது ஐ.நா.
## சரத் வீரசேகர சீற்றம்



மாலியில் ஐக்கிய நாடுகள் அமைதி காக்கும் படையில் பணியில் ஈடு பட்டிருந்த இலங்கை படை அதிகாரியை மீள நாட்டுக்கு அழைத்துக் கொள்ளுமாறு ஐக்கிய நாடுகள் சபை வெளியிட்டுள்ள கருத்து ஒருதலைப்பட்சமானது என இராணுவத்தினரது உரிமைகளைப் பாதுகாக்கும் அமைப்பின் தலைவர் அட்மிரல் சரத் வீரசேகர தெரிவித்தார். மனித உரிமையினை மீறும் வகையில் இவர் செயற்பட்டுள்ளார் என்று இலங்கைக்கு எதிராக தொடர்ந்து குரல் எழுப்புபவர்களின் அமைப்புக்கள் சாட்டிய குற்றச்சாட்டுக்களை மாத்திரம் வைத்துக் கொண்டு ஐ. நா. வினால் தீர்மானங்களை மேற்கொள்ள முடியாது . இவ் விடயத்தில் அரசாங்கம் எவ்வகையான அனுகு முறைகளை கையாளும் என்பது சந்தேகமாகும் எனவும் அவர் குறிப்பிட்டார். இது தொடர்பில் அவர் மேலும் குறிப்பிடுகையில் தெரிவித்ததாவது நாட்டுக்காக போராடிய இராணுவத்தினர் இன்று உள்ளூர் மட்டம் தொடக்கம் சர்வசேம் வரை தாக்கப்பட்டு வருகின்றனர். இறுதிக்கட்ட யுத்தத்தில் போர் குற்றங்கள் இடம்பெற்றன என்று ஐக்கிய நாடுகளின் மனித உரிமை பேரவையில் புலம்பெயர் விடுதலை புலிகளின் அமைப்புக்கள் மற்றும் சர்வதேச அரச மற்றும் அரச சார்பற்ற அமைப்புக்கள் முன்வைத்த குற்றச்சாட்டுக்களின் நெருக்கடிகளை ஒவ்வொரு வருடமும் எதிர் கொள்ள வேண்டியதாகவே உள்ளது.மனித உரிமை மீறலில் குறித்த அதிகாரி ஈடு பட்டுள்ளார் என்று கிடைக்க பெற்ற புதிய தகவல்களுக்கு அமையவே இத்தீர்மானம் மேற்கொள்ளப்பட்டிருப்பதாக ஐ. நா குறிப்பிட்டுள்ளது. இவ்விடயம் தொடர்பில் தென்னாப்பிரிகாவினை தலைமையகமாக கொண்டு இயங்கும் இலங்கைக்கான நீதி மற்றும் உண்மைக்கான அமைப்பு கடந்த ஜுன் மாதம் இவ்விடயம் தொடர்பில் அறிக்கை வெளியிட்டுள்ளதாக குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வமைப்பின் பேச்சாளராக ஐ. நா. மனித உரிமை பேரவையின் மனித உரிமை தொடர்பிலான ஆய்வாளர் யஷ்மின் சுகா செயற்படுகின்றார். மனித உரிமை பேரவையில் கடந்த காலங்களில் இடம் பெற்ற இலங்கை தொடர்பிலான காலக்கிரம கூட்டத்தொடர்பில் இவர் எமக்கு எதிராகவே செயற்பட்டார்.சர்வதேசத்தில் முன்னிலை வகிக்கின்றோம் என்று மார் தட்டிக் கொள்ளும் தேசிய அரசாங்கம் இவ்விடயத்தில் எவ்வாறான அனுகுமுறைகளை கையாளும் என்பது சந்தேகத்திற்கிடமாகவே காணப்படும். இலங்கை இராணுவம் தொடர்பில் சர்வதேசங்கள் ஏதேனும் குற்றச்சாட்டுக்களை தொடுக்கும் பொழுது அரசாங்கம் அவ்விடயம் தொடர்பில் ஒரு தலைபட்சமாகவே செயற்பட்டுள்ளது .

லண்டனில் உள்ள இலங்கை துர்துவராலயத்தின் பாதுகாப்பு அதிகாரியாக கடமையாற்றிய பிரிகேடியர் பிரியந்த பெர்னாண்டோவின் விவகாரத்தில் புலம் பெயர் அமைப்புக்களின் கோரிக்கையே இறுதியில் நிறைவேற்றப்பட்டது. இவ்வாறான செயற்பாடுகள் ஒரு தரப்பினரது நோக்கங்களை வலுப்படுத்துவதாக உள்ளன. மாலியில் ஐ. நா வின் அமைதி காக்கும் படையின் அதிகாரியின் விவகாரத்தில் அரசாங்கம் விரைவான தீர்க்கமான விடயங்களை செயற்படுத்த வேண்டும் என்றார்.

## ஆய்வுக்கான பட்டியலில் லெப்.கேணல் அமுனுபுரவின் பெயர் இருக்க-வில்லை மனித உரிமைகள் ஆணைக்குழுவின் தலைவர் தீபிகா உடகம

மாலிக்கு அனுப்பப்பட்ட இலங்கை படையினர் இலங்கை மனித உரிமைகள் ஆணைக்குழுவின் ஆய்வுகளுக்கு உட்படுத்தப்பட்டு அனுமதிக்கப்பட்டவர்கள் அல்ல என்று மனித உரிமைகள் ஆணைக்குழுவின் தலைவர் கலாநிதி தீபிகா உடகம தெரிவித்துள்ளார். மாலியில் இலங்கை இராணுவ அணியின் கட்டளை அதிகாரியான லெப்.கேணல் அமுனுபுரவை திருப்பி அனுப்ப ஐ.நா. எடுத்துள்ள நடவடிக்கை தொடர்பாக கருத்து வெளியிட்டுள்ள அவர்,

ஐ.நா. அமைதிப்படைக்குத் தெரிவு செய்யப்படும் இலங்கை படையினரை ஆய்வு செய்வதற்கு இலங்கை மனித உரிமைகள் ஆணைக்குழு இணங்கியிருந்தது. இந்த விவகாரம் தொடர்பாக எமக்கு எந்த தகவலும் கிடைக்கவில்லை. இது எமது ஆணைக்குழு ஊடாக நடக்கவில்லை. மாலிக்கு அனுப்புவதற்கான இலங்கை இராணுவ அணி 2017ஆம் ஆண்டு தொடக்கத்தில், முதலில் மீளாய்வுக்காக வந்தது. நாங்கள் எமது ஆய்வுகளின் ஊடாக சிலருக்கு அனுமதி அளித்தோம். சிலர் தொடர்பாக மேலதிக தகவல்களைக் கோரினோம். அப்போது ஐ.நா. ஏற்கனவே இந்த அணியை ஆய்வுக்குட்படுத்தி விட்டதாகவும், உங்களின் சேவை எமக்குத் தேவையில்லை என்றும் இராணுவத் தளபதியாக இருந்த லெப்.ஜெனரல் கிரிசாந்த டி சில்வா கடிதம் அனுப்பினார்.எனவே நாங்கள் ஒட்டுமொத்த இராணுவ அணியையும் ஆய்வுக்குட்படுத்துவதை நிறுத்தினோம். ஐ.நா.வும் இலங்கை இராணுவமுமே அதனைக் கையாண்டன. திருப்பி அனுப்புதல் தொடர்பாக நியூயோர்க்கில் உள்ள இலங்கை விதிவிடப் பிரதிநிதி இலங்கை மனித உரிமைகள் ஆணைக்குழுவுக்கு தெரியப்படுத்திய போது, விபரங்களை பரிசோதித்தோம்.

அப்போது, லெப்.கேணல் அமுனுபுரவின் பெயர், ஆணைக்குழுவுக்கு ஆய்வுக்காக அனுப்பப்பட்ட மூலப் பட்டியலில் இருக்கவில்லை என்று கண்டறியப்பட்டது. இது இலங்கை இராணுவத்துக்கும், ஐ.நா.வுக்கும் இடையிலான விவகாரம்" என்று தெரிவித்தார்.

# 40 ஆவது ஜெனிவா கூட்டத் தொடரில் புதிய பிரேரணை கொண்டுவர முயற்சி



ஐக்கிய நாடுகள் மனித உரிமைகள் பேரவையின் 40 ஆவது கூட்டத் தொடர் எதிர்வரும் மார்ச் மாதம் நடைபெறவுள்ள நிலையில் அந்த கூட்டத் தொடரின் போது இலங்கை தொடர்பாக புதிய பிரேரணை ஒன்று கொண்டுவரப்படுமா என்பது தொடர்பில் இராஜதந்திர மட்டங்களில் ஆராயப்படுவதாக தெரிகின்றது.இது தொடர்பில் தமிழ் தேசியக் கூட்டமைப்பு அடுத்தகட்ட இராஜதந்திர நடவடிக்கைகளில் ஈடுபடும் என எதிர்பார்க்கப்படுகின்றது. 40 ஆவது கூட்டத் தொடரில் பிரிட்டன் அல்லது ஜேர்மனி ஆகிய நாடுகள் இலங்கை தொடர்பான பிரேரணையை கொண்டுவரவேண்டுமென ஏற்கனவே தமிழ் தேசியக் கூட்டமைப்பு தெரிவித்து வருகின்றது.

இந்நிலையில் அந்நாடுகளுடன் தமிழ் தேசியக் கூட்டமைப்பு இராஜதந்திர மட்டப் பேச்சுவார்த்தைகளில் ஈடுபடும் எனத் தெரியவருகிறது. 2015ஆம் ஆண்டு ஜெனிவாவில் கொண்டுவரப்பட்ட இலங்கை தொடர்பான பிரேரணையானது 2017ஆம் ஆண்டு மார்ச் மாதத்துடன் முடிவடைந்தது. பின்னர் 2017ஆம் ஆண்டு அந்தப் பிரேரணை இரண்டு வருடங்களுக்கு நீடிக்கப்பட்டது.இந்நிலையிலேயே 2019ஆம் ஆண்டில் தற்போதைய பிரேரணையின் ஆயுட்காலம் முடிவடையவுள்ளதால் அடுத்த பிரேரணையைக் கொண்டுவருவதற்கான முயற்சிகள் இடம்பெற்று வருகின்றன.அந்தவகையில் ஐக்கிய நாடுகள் மனித உரிமைகள் பேரவை மட்டத்தில் தமிழ் தேசியக் கூட்டமைப்பு அடுத்துவரும் மாதங்களில் பேச்சுவார்த்தை நடத்தலாம் என எதிர்பார்க்கப்படுகின்றது. எதிர்வரும் 2019ஆம் ஆண்டு மார்ச் மாதம் நடைபெறவுள்ள 40ஆவது கூட்டத் தொடரில் இலங்கை தொடர்பான முழுமையான மற்றும் விபரமான அறிக்கையை ஐக்கிய நாடுகள் மனித உரிமைகள் ஆணையாளர் வெளியிடவிருக்கின்றார். அதாவது ஜெனிவா பிரேரணையை இலங்கை எவ்வாறு அமுல்படுத்தியது என்பது குறித்த அறிக்கையையே ஐக்கிய நாடுகள் மனித உரிமைகள் ஆணையாளர் முன்வைக்கவுள்ளார்.

அதேபோன்ற இலங்கைக்கு விஜயம் மேற்கொண்ட ஐ.நா.விசேட நிபுணர்களின் அறிக்கைகளும் 40 ஆவது கூட்டத் தொடரில் தாக்கல் செய்யப்படவுள்ளன. மேலும் சர்வதேச மனித உரிமைகள் அமைப்புக்களும் இலங்கை குறித்த அறிக்கைகளை தாக்கல் செய்யவுள்ளன.இலங்கையிலிருந்தும் வெளிவிவகார அமைச்சர் தலைமையிலான உயர் மட்டத் தூதுக்குழு கலந்துகொள்ளவுள்ளது.

அதன்போது இலங்கையின் சார்பில் விபரமாக அறிக்கையொன்று முன்வைக்கப்படவுள்ளதுடன் இலங்கை சார்பில் வெளிவிகார அமைச்சர் உரையாற்றவிருக்கின்றார். அதன்போது இலங்கை 2015 ஆம் ஆண்டுக்கு பின்னர் அரசாங்கம் முன்னெடுத்துள்ள முன்னேற்றங்கள் குறித்து விளக்கமளிக்கப்படும் என்று தெரிவிக்கப்படுகின்றது. குறிப்பாக காணாமல் போனோர் குறித்த அலுவலகம் மற்றும் இழப்பீட்டு அலுவலகம் ஆகியவற்றை அமைத்துள்ளமை குறித்தும் இதன்போது சர்வதேசத்துக்கு கூறப்படவுள்ளது.

அத்துடன் பாதிக்கப்பட்ட மக்களின் சார்பில் மக்கள் இந்த கூட்டத் தொடரில் கலந்துகொள்ளவுள்ளனர். அவர்கள் தமக்கு நீதி நிலைநாட்டப்படவேண்டும் என்ற விடயத்தை ஜெனிவாவில் வலியுறுத்தவிருக்கின்றனர். அத்துடன் தமிழ் தேசியக்கூட்டமைப்பின் பிரதிநிதிகளும் ஜெனிவா கூட்டத் தொடரில் கலந்துகொள்ளவுள்ளனர்.அவர்கள் இதன்போது சர்வதேச நாடுகளின் இராஜதந்திர பிரதிநிதிகளை சந்தித்து பேச்சுவார்த்தை நடத்தவுள்ளனர். மேலும் தென்னிலங்கையிலிருந்தும் பல்வேறு அமைப்புக்கள் இம்முறை கூட்டத் தொடரில் கலந்து கொள்ளவுள்ளன. இதன்போது இலங்கை தொடர்பாக பிரேரணையை நிறைவேற்றுவதற்கான அதிகாரம் சர்வதேசத்திற்கு இல்லை என இந்த அமைப்புக்கள் வலியுறுத்தவுள்ளன.

அதேபோன்று 20இற்கும் மேற்பட்ட விசேட உபகுழுக்கூட்டங்கள் இலங்கை தொடர்பாக இம்முறை ஜெனிவாவில் நடைபெறவுள்ளன. சர்வதேச மனித உரிமைகள் அமைப்புக்கள் இந்த உப குழுக்கூட்டங்களை ஏற்பாடு செய்துள்ளன. இதில் சர்வதேச நாடுகளின் பிரதிநிதிகள் மனித உரிமைகள் அமைப்புக்கள் இல ங்கை அரசாங்கம் பாதிக்கப்பட்ட மக்கள் ஆகிய தரப்புக்களின் பிரதிநிதிகள் மற்றும் தென்னிலங்கை சிவில் அமைப்புக்களின் பிரதிநிதிகள் ஆகியோர் கலந்துகொண்டு உரையாற்றவுள்ளனர்.



# தமிழ் தேசிய உணர்வாளர்களை ஒன்றிணைக்க பாடுபடுவோம்

## புதிய கட்சியை ஆரம்பித்த அனந்தி அறிவிப்பு

தமிழ் தேசிய உணர்வு சிதைவடைந்துள்ளதால் உள் நாட்டிலும், வெளி நாட்டிலும் உள்ள தமிழ் தேசிய உணர்வாளர்களை ஒன்றிணைத்து, தமிழர்களின் சுய நிர்ணய உரிமையை அடைவதற்கான பாதையில் பயணிக்க ஈழத்தமிழர் சுயாட்சி கழகம் உருவாக்கப்பட்டுள்ளது என்று அக்கட்சியின் செயலாளர் நாயகமான அனந்தி சசிதரன் தெரிவித்துள்ளார்.தமிழ் தேசிய கூட்டமைப்பிலிருந்து வெளியேற்றப்படுபவர்கள், வெளியேறுபவர்கள், தமக்கான ஒரு கட்டமைப்பினை உருவாக்க வேண்டிய கட்டாயத்தில் இருப்பதாகவும் அவர் தெரிவித்துள்ளார். தமிழரசு கட்சியில் இணைந்து வடக்கு மாகாண தேர்தலில் போட்டியிட்டு வெற்றிபெற்ற அனந்தி சசிதரன் பின்னர் இரண்டாவது அமைச்சரவை நியமனத்தின் போது அமைச்சராகவும் நியமிக்கப்பட்டார். இந் நிலையில் தற்போது அவர் புதிய கட்சியொன்றை உருவாக்கியுள்ளதாக அறிவித்துள்ளார்.

ஈழத் தமிழர் சுயாட்சி கழகம் என பெயரிட்டுள்ள அக்கட்சிக்கு அவரே செயலாளர் நாயகமுமாகவுள்ளார். இதன்படி இக்கட்சியினை அங்குரார்ப்பணம் செய்து வைக்கும் நிகழ்வானது ஞாயிற்றுக்கிழமை யாழில் விருந்தினர் விடுதியொன்றில் இடம்பெற்றது. மதத் தலைவர்களது ஆசியுடன் ஆரம்பமான இந்நிகழ்வில் தனது கட்சியின் கொள்கை தொடர்பாக உரையாற்றிய அவர் மேற்கண்ட விடயத்தை தெரிவித்திருந்தார். இங்கு அவர் மேலும் தெரிவிக்கையில்,தமிழ் தேசிய கூட்டமைப்பினுடைய கருத்து முரண்பாடுகளுடன் உள்ள உறுப்பினர்கள், கட்சியிலிருந்து வெளியேற வேண்டும். கூட்டமைப்பிலிருந்து வெளியேறுபவர்கள், அல்லது வெளியேற்றப்படுபவர்கள், இன்னொரு கட்டமைப்பினை உருவாக்க வேண்டிய நிலை ஏற்படுகின்றது.

திட்டமிட்ட குடியேற்றம், பேரினவாத சூழ்ச்சிகளின் மத்தியில் வடகிழக்கில் நீண்டகாலமாக வாழ்ந்து வரும் பேராதிக்க ஒடுக்குமுறைகளை இல்லாதொழித்து, தமிழ் மக்களின் தேசிய அபிலாஷைகளை உருவாக்கும் வகையில், தமிழ் மக்களின் சுயநிர்ணய உரிமையை அடிப்படையாகக்கொண்ட சுயநிர்ணய உரிமையைக்கொண்ட அதிகபட்ச சுயாட்சியை வென்றெடுப்பதே எமது பிரதான அரசியல் நோக்கமாகும்.வடகிழக்கில் வாழும் முஸ்லிம் மக்களின் உரிமைகள், தமிழ் பேசும் மக்கள் என்ற ரீதியில் குறிப்பாகவும், பண்பாட்டு ரீதியில் உறுதியாகவும் இருத்தல் வேண்டும். வடகிழக்கிற்கு வெளியில் வாழும் மலையக மக்களின் தேசிய உரிமைகளை உறுதி செய்வதற்கான நிகழ்ச்சி நிரல்களின் அடிப்படையிலேயே எமது கட்சி செயற்படும்.

இவ்வாறான செயற்பாட்டுடன் செயற்பட்டால், இன ஒடுக்கல்களை இல்லாதொழித்து சுயாட்சி, சமத்துவம் என்ற அடிப்படையில் இலங்கை வாழ், அனைத்து தேசிய இனங்களிடையேயும் ஐக்கியத்தை வளர்க்க முடியும். சிங்கள மக்கள் மத்தியில் உள்ள சக்திகளுடனும் ஐக்கியப்பட்டு செயற்படுவோம். தமிழ் மக்களின் மாற்றத்திற்காகவும், சமூக மாற்றத்திற்காகவும் செயற்படும் அமைப்புக்களுடனும், இனப்படுகொலையை வலியுறுத்தும் அமைப்புக்களுடனும், ஒத்துழைப்புடன் செயற்பட வேண்டும். ஐக்கிய நாடுகள் மனித உரிமைப் பேரவையின் தீர்மானத்தினை நடை முறைப்படுத்த இலங்கை அரசுக்கு அழுத்தம் கொடுப்பதுடன், தமிழ் மக்களின் தேசிய அபிலாஷைகளுக்கும், அயல் நாடுகளினதும் மக்களினதும் ஒத்துழைப்பினைப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

இந்திய அரசு மற்றும் தமிழக மக்களின் ஒத்துழைப்பினைப் பெற்றுக்கொள்ள வேண்டும். உட்கட்சி ஜனநாயகம், கொள்கை பற்றுறுதி அதன் கொள்கைகள் நாளடைவில் மாற்றமடைந்து சென்று மக்களின் தேவைகள் அபிலாசைகள் புறக்கணிக்கும் விதமாக வரும் அரசியலை எமது மக்கள் வெறுக்கத் தொடங்கிவிட்டார்கள். கடந்த சில வருடங்களில் தமிழ் தேசிய அரசியலில் ஏற்பட்ட தவறுகள், தடம்புரள்வுகள், எமது மக்களின் மனங்களில் ஆழப்பதிந்துவிட்டன. இதற்குரிய தீர்வினை முதலில் கண்டறிய வேண்டும்.

குறிப்பிட்ட விடயங்களுக்காக ஈழத் தமிழர் சுயாட்சி கழகத்தினை பலமாக கட்டி வளர்ப்பதுடன், தேசிய அபிலாசைகளை வென்றெடுக்க தனி நபர்களையோ, அமைப்புக்களையோ நம்புவதைவிட பூரணமாக மக்களை மையப்படுத்திய புதிய வழிமுறைகளுடன் முன்னேற வேண்டும். தமிழ் தேசிய கூட்டமைப்பு உருவாக்கப்பட்டதன் நோக்கம் சிதைந்து போயுள்ளதால், உள்நாட்டிலும், வெளிநாட்டிலுமுள்ள தமிழ் தேசிய உணர்வாளர்கள், தமது தமிழ் தேசிய உணர்வை அடைவதற்காக பல்வேறு திசைகளில் பயணிக்கத் தொடங்கியுள்ளார்கள்.

இவர்கள் அனைவரையும் ஒன்று சேர்க்க வேண்டிய அத்தியாவசியம் இந்தக் காலகட்டத்தில் எழுந்துள்ளது. இந்தக் கடமைப் பொறுப்பினை நிறைவேற்றுவதற்கு ஈழத் தமிழர் சுயாட்சி கழகத்திற்கு அனைவரும் ஒத்துழைப்பு வழங்க வேண்டுமென்றும் தெரிவித்தார்.



# ஐ.நா. அமைதிப் படையில் பணியாற்றிய இலங்கை அதிகாரி திருப்பியனுப்படுகிறார்

## போர்க் குற்றச்சாட்டு சுமத்தப்பட்டவராம்

மாலியில் உள்ள ஐக்கிய நாடுகள் அமைதிப்படையில் பணியாற்றும் இலங்கை இராணுவ அதிகாரியான லெப்டினன் கேர்ணல் கலன பிரியங்கர லங்காமித்ர அமுனு புரேவை உடனடியாக இலங்கைக்கு திருப்பி அழைக்குமாறு கோரிக்கை விடுத்துள்ளதாக ஐ.நா.பொதுச்செயலாளரின் பேச்சாளர் ஸ்டீபன் டுஜாரிக் தெரிவித்துள்ளார்.இது குறித்து அவர் மேலும் கூறுகையில்,

ஐக்கிய நாடுகள் பல்பரிமாற்ற ஒருங்கிணைந்த உறுதிப்படுத்தல் பணியகத்தில் பணியாற்றிவந்த லெப். கேர்ணல் கலன பிரியங்கர லங்காமித்ர அமுனுபுரே இலங்கையில் நடைபெற்ற உள்நாட்டு யுத்தத்தில் யுத்தக் குற்றங்களை இழைத்தவர் என்று கண்டறியப்பட்டுள்ளது.ஐக்கிய நாடுகள் அமைதிப்படையில் பணியாற்றுவதற்கு முன்னதாக அனைத்து வீரர்களினதும் விடயங்கள் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன. இருப்பினும் மேற்படி இலங்கை இராணுவ வீரர் குறித்து அண்மையில் புதிதாக கிடைத்த தகவல்கள் கிடைத்திருந்தன. அதனடிப்படையில் அவரது மனித உரிமை பதிவுகள் பற்றிய அண்மைய தகவல்கள் ஆய்வு செய்யப்பட்டன. அதன் பின்னரே ஐக்கிய நாடுகள் சபை இந்த முடிவை எடுத்துள்ளது. இந்த விடயம் ஐக்கிய நாடுகள் பொதுச் செயலாளர் அந்தோனியோ குட்டெரெஸ்ரால் இலங்கை அரசாங்கத்திற்கு உத்தியோகபூர்வமாக அறிவிக்கப்பட்டுள்ளது.

குறித்த இராணுவத் தளபதி ஏற்கனவே நாடு திரும்பாதிருப்பின், அவர் மிகவிரைவில் இலங்கைக்கு திருப்பி அனுப்பப்படுவார். கூடிய விரைவில், அவருக்கு பதிலாக ஒருவரை நியமிக்குமாறு இலங்கை அரசாங்கத்திடம் ஐக்கிய நாடுகள் சபை கோரியுள்ளது என்றார்.

# அமைச்சரவையில் இருவருக்கு 'றோ' அமைப்புடன் தொடர்பு தகவல்களை திரட்டிக் கொணடு இருப்பதாக சறுகிறார்

## மஹிந்த அமரவீர

அமைச்சரவைக் கூட்டத்தின்போது ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேன இந்தியாவின் "றோ" அமைப்புக்கு எதிராக கருத்துத் தெரிவித்ததாக இந்திய பத்திரிகைக்கு தகவல் தெரிவித்த நான்கு அமைச்சர்களில் இரண்டு பேர் தொடர்பில் தகவல் கிடைத்துள்ளது அதனை உறுதிப்படுத்திய பின்னர் அவர்கள் தொடர்பில் வெளிப்படுத்துவோம் என ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணியின் செயலாளரும் அமைச்சருமான மஹிந்த அமரவீர தெரிவித்தார்.

இவ்வாறு தகவல்களை வழங்கும் அமைச்சர்கள் றோ புலனாய்வு துறையுடன் தொடர்புபட்டவர்கள் என்றே எங்களுக்கு தகவல் கிடைத்திருக்கின்றது. குறித்த ஊடகவியளாலர் ஊடாக றோ என்ற புலனாய்வு அமைப்புடன் தொடர்புகளை வைத்திவருவதாகவும் எங்களுக்கு தகவல் கிடைத்து வருகின்றது. நேற்று முன்தினம் பெலியத்த பிரதேசத்தில் இடம்பெற்ற நிகழ்வொன்றில் கலந்துகொண்டு உரையாற்றுகையிலேயே இவ்வாறு தெரிவித்தார். அவர் அங்கு தொடர்ந்து கூறுகையில்,

ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேன சீனா மற்றும் இந்தியாவுக்கு எதிராக கருத்து தெரிவித்ததாக கடந்த சில தினங்களில் ஊடகங்களில் வெளியாகி இருந்தது. இது முற்றாக உண்மைக்கு புறம்பான தகவலாகும். இந்த தகவல்களை நான்கு அமைச்சர்கள்தான் தெரிவித்ததாக இந்திய பத்திரிகையின் ஊடகவியலாளர் குறிப்பிட்டிருக்கின்றார். குறித்த நான்கு அமைச்சர்களும் யார் என்பதை நாங்கள் தேடிப்பார்க்கவேண்டியிருக்கின்றது.

அத்துடன் இவ்வாறு இந்திய பத்திரிகைக்கு தகவல் தெரிவித்த நான்கு அமைச்சர்களில் எங்களுக்கு சந்தேகமான இரண்டு அமைச்சர்கள் தற்போது இருக்கின்றனர். எமது சந்தேகம் உறுதியான பின்னர் அவர்கள் தொடர்பில் வெளிப்படுத்துவோம். அவ்வாறானவர்களுக்கு எதிராக கடும் நடவடிக்கை எடுப்பது ஜனாதிபதி மற்றும் பிரதமரின் பொறுப்பாகும்.ஏனெனில் அமைச்சரவையில் பேசப்படாத ஒன்றை பேசியதாக தெரிவிப்பது பாரிய குற்றமாகும். அத்துடன் இவ்வாறு தகவல்களை வழங்கும் அமைச்சர்கள் றோ புலனாய்வு துறையுடன் தொடர்புபட்டவர்கள் என்றே எங்களுக்கு தகவல் கிடைத்திருக்கின்றது. குறித்த ஊடகவியளாலர் ஊடாக றோ என்ற புலனாய்வு அமைப்புடன் தொடர்புகளை வைத்திவருவதாகவும் எங்களுக்கு தகவல் கிடைத்து வருகின்றது.

அமைச்சரவையின் கூட்டுப்பொறுப்பை பாதுகாக்கும் பொறுப்பு எல்லோருக்கும் இருக்கின்றது. பத்திரிகைகளுக்கு பொய் தகவல்களை தெரிவிப்பது, நாட்டு தலைவரை சர்வதேசத்துடன் முரண்படச்செய்யும் செயலாகும். அவ்வாறான சதிகாரர்கள் இருந்தால் அவர்களை அமைச்சரவையில் இருந்து நீக்கும் பொறுப்பு ஜனாதிபதிக்கு இருக்கின்றது என்றார்.

# தமிழீழ மண்ணில் சிங்களக் குடியேற்றங்கள்

ஒரு நோக்கு

சி. வரதராஜன்
கலைமாணி (சிறப்பு – பொருளியல்)

## அறிமுகம்

எந்த ஒரு நாட்டிற்கும் இறுதியாக இரண்டு மூல வளங்கள் காணப்படுகின்றன. அந்த நாட்டின் காணிகளும் அதன் மக்களுமே அந்த மூல வளங்கள் ஆகும். காணி என்பது ஒரு தேசிய மூல வளம். எங்கு அமைந்திருந்தாலும் காணி என்பது மிகப் பெறுமதி வாய்ந்ததும் வரையறுக்கப்பட்டதுமான ஒரு மூல வளம் ஆகும். நீண்ட காலமாகவே மனித சமுதாயத்தின் வாழ்க்கை, அதன் முன்னேற்றம் என்பவற்றுடன் காணி நெருங்கிய தொடர்புடையதாக இருந்து வந்துள்ளது. இதன் விளைவாகவே காணி தொடர்பான கொள்கைகளும் பிரச்சினைகளும் மனித சமூகத்தில் மிக முக்கியமான இடத்தினை வகித்து வந்துள்ளன. காணிப் பிரச்சினையைச் சரியான முறையில் கையாள்வதன் மூலமே ஆள்பவர்களினதும் ஆட்சிகளினதும் சமூக பொருளாதார முறைகளினதும் வெற்றி தோல்விகள் நிர்ணயிக்கப்படுகின்றன என்பதனைக், கடந்த கால வரலாறு பல்வேறு தடவைகள் எமக்கு எடுத்துக் காட்டியுள்ளது.

1815 இல் கண்டி ஒப்பந்தம் கைச்சாத்தாகியதைத் தொடர்ந்து இலங்கை பிரித்தானியர் ஆட்சியின் கீழ் கொண்டு வரப்பட்டது. 1840 ஆம் ஆண்டில் முடிக்குரிய காணிகளில் அத்துமீறிய குடியேற்றம் தொடர்பான சட்டம், காலனித்துவ அரசாங்கத்தினால் நிறைவேற்றப்பட்டது. இதனைத் தொடர்ந்து அரசாங்கத்தின் காணிக் கொள்கைக்கு சட்ட முறையான அங்கீகாரம் கிடைத்தது. கண்டி, வெல்லச மாகாணங்களில் காணப்பட்ட விடுதலைப் போராளிகளின் கிராமியப் பொருளாதாரத்தினைச் சிதைப்பதே, இச்சட்டத்தின் உண்மையான நோக்கமாக இருந்தது. 1818 ஆம் ஆண்டுக் கலவரமும் அதனைத் தொடர்ந்த மக்கள் எழுச்சியும், ஆள்பவர்களின் மனதில் பாதுகாப்பற்ற உணர்வு ஒன்றினை ஏற்படுத்தியது. இதனால், கெரில்லா போர் முறையில் ஆற்றல் கொண்டிருந்த விடுதலை வீரர்களின் புகலிடமாக இருந்த மத்திய மலை நாட்டை, ஏனைய பிரதேசங்களுடன் இணைப்பது என, அரசாங்கம் தீர்மானித்தது. இப்பின்னணியிலேயே காலனித்துவக் காணிக் கொள்கை உருவாக்கப்பட்டது. 1840 ஆம் ஆண்டுச் சட்டத்தின் மூலம் மக்களின் குடியிருப்பிற்குள்ளாகாத காணிகள் அனைத்தும் முடிக்குரிய காணிகளாக மாற்றப்பட்டன. இதற்கும் மேலாக மக்களின் உடைமையாகவுள்ள காணிகளைக் கூட முடிக்குரியதாக மாற்றுவதற்கு ஏதுவாக, 1897 ஆம் ஆண்டின் முதலாம் இலக்கக் காணிகள் கட்டளைச் சட்டம் உருவாக்கப்பட்டது. இச் சட்டத்தின் 24 ஆம் பிரிவு பின்வருமாறு கூறுகின்றது: "தான் உண்மையாகக் குடியிருக்கும் காணிக்குமேல் எவரேனும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட காணித்துண்டுகளுள் குடியேறி இருப்பார்களேயானால் அக்காணிகள் அவர்களது உடைமையாக மாட்டா". பாரம்பரிய காணி உடைமைகளை நசித்துச் சிதைப்பதாக இச்சட்டத்தின் பரிவுகள் அமைந்திருந்தன. பாரம்பரியமாகக் குடி மக்களின் உடைமையாகக் காணப்பட்ட காணிகள் அவர்களிடம் இருந்து பறித்தெடுக்கப்பட்டன. இத்தகைய காலனித்துவக் காணிக் கொள்கைளின் பயனாகக் காணி அற்ற நிலையும், விவசாயிகள் இடையே வறுமையும் ஏற்படலாயின். தமது காணிக் கொள்கை விளைவித்த பாதகமான தாக்கங்கள் பற்றி சுமார் ஒரு நூற்றாண்டின் பின்னரே பிரித்தானியர் உணரலாயினர். காணிக் கொள்கையில் மாற்றம் கொண்டு வரப்படல் வேண்டும் என, இலங்கைத் தலைவர்கள் வற்புறுத்தத் தொடங்கினர். இந்நிலையில் 1927 ஆம் ஆண்டு முதலாவது காணி ஆணைக்குழு நியமிக்கப்பட்டது. இவ்வாணைக்குழுவின் சிபார்சுகளின் விளைவாக 1935 ஆம் ஆண்டு காணி அபிவிருத்திக் கட்டளைச் சட்டம் இயற்றப்பட்டது. வேகமான காணிக் குடியேற்ற யுகம் ஒன்றின் தோற்றத்திற்கு இச் சட்டம் வழிவகுத்தது. எந்த விதமான அடிப்படை மாற்றமும் இன்றி இன்னும் இக் கொள்கை தொடர்ந்தும் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றது.

சுதந்திரத்தின் பின்னர், இரண்டு காணி ஆணைக்குழுக்கள் இதுவரை இலங்கை அரசாங்கத்தினால் நியமிக்கப்பட்டன.

- 1959 ஆம் ஆண்டு காணி ஆணைக்குழு
- 1987 ஆம் ஆண்டு காணி ஆணைக்குழு

இலங்கைத் தீவின் மொத்த நிலப் பரப்பு 6, 570, 134 ஹெக்டேயர் (16, 228, 230 ஏக்கர்கள்) ஆகும். இவற்றுள் 5, 403, 899 ஹெக்டேயர் (13, 347, 630 ஏக்கர்கள்) காணி அரசுக்குச் சொந்தமானவையாகும். மிகுதி 1, 166, 235 ஹெக்டேயர் ( 2, 880, 600 ஏக்கர்கள்) காணி தனியாருக்குச் சொந்தமானவை ஆகும். எனவே இலங்கையில் மொத்தக் காணிகளில் 82.3 சத வீதமானவை அரசுக்குச் சொந்தமானவையாக இரப்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு காணியுடைமையில் ஏறத்தாழ தனி உரிமையினைக் கொண்டுள்ள அரசாங்கம் கடைப்பிடிக்கின்ற காணிக் கொள்கை, நாட்டில் பல சமூக பொருளாதார விளைவுகளை ஏற்படுத்துவனவாக அமைந்துள்ளது.

1935 ஆம் ஆண்டிலிருந்து பல்வேறுபட்ட பெயர்களிலான குடியேற்றத் திட்டங்கள் மூலம் காணிகளின் மறு பகிர்வினை அரசாங்கம் மேற்கொண்டது.

- பாரிய குடியேற்றத் திட்டங்கள்.
- உயர் நிலக் குடியேற்றத் திட்டங்கள்.
- கிராம விரிவாக்கத் திட்டங்கள்.
- இளைஞர் குடியேற்றத் திட்டங்கள்.
- காணிக் கொடைகள் (சிறப்பு ஏற்பாடுகள்.)
- அத்துமீறிய குடியேற்றங்கள் ஒழுங்கு படுத்துதல்.
- நடுத்தர மட்டத்திலான நீர்ப்பாசனத் திட்டங்கள்.
- மழை நீர்ப்பாசன பண்ணை அபிவிருத்திக் குடியேற்றத் திட்டங்கள்.

மேற் கூறப்பட்ட பெயர்களிலான பல்வேறு பட்ட திட்டங்கள் மூலம் அரசாங்கத்தினால் காணி பகிர்ந்தளிக்கப்பட்டு, மக்கள் குடியமர்த்தப்பட்டனர். காணி அற்றோருக்குக் காணி வழங்குதல், இதன் மூலம் காணிப் பகிர்வில் நிலவும் சமன் இன்மையைக் குறைக்கத்தக்க வகையில் காணி மறு பகிர்வினை மேற்கொள்ளுதல், உற்பத்தியினை குறிப்பாக நெல் மற்றும் உப உணவு உற்பத்தியினை பெருக்குதல், கிராமிய மட்டத்தில் நிலவும் வேலையின்மையை நீக்குதல், மக்களின் வருமான மட்டத்தினை அதிகரிக்கச் செய்வதன் மூலம் கிராமிய வறுமையினை நீக்குதல், பிரதேச ரீதியான அபிவிருத்தியினை ஏற்படுத்துதல் போன்ற பல்வேறு பட்ட அபிவிருத்தி நோக்கங்கள் கருதி 1935 ஆம் ஆண்டிலிருந்து பல்வேறுபட்ட குடியேற்றத் திட்டங்கள் இலங்கையின் வடக்கு, கிழக்குப் பிரதேசங்களில் இலங்கை அரசாங்கத்தினால் நடைமுறைப்படுத்தப்பட்டன.

1936 - 1988 காலப் பகுதியில் இலங்கை முழுவதும் 813, 495 ஹெக்டேயர் காணி அரசாங்கத்தினால் பகிர்ந்தளிக்கப்பட்டது. இக் காணிகள் 1, 439, 407 ஆட்களுக்குப் பகிர்ந்து ஒதுக்கப்பட்டது. ஆனால் இக் குடியேற்றத் திட்டங்கள் மூலம் அதனது அபிவிருத்தி நோக்கங்கள் அடையப்பட்டனவா என்ற வினா, இக்குடியேற்றத் திட்டங்கள் அறிமுகப்படுத்தப்பட்ட காலத்திலிருந்தே எழுப்பப்பட்டு வந்துள்ளது. இன்று இலங்கையின் கிராமியத் துறையில் காணப்படும் பின்வரும் நிலைமைகள் இப் பெறுமதி வாய்ந்த வினாவிற்கு விடையாக அமையும்.

- 27 சதவீதமான குடும்பங்கள் காணிகள் அற்றவையாக உள்ளன.
- 42.4 சதவீதமான காணி உடைமைகள் இரண்டு ஏக்கருக்கும் குறைவானவை ஆகும்.
- 82 சதவீதமான கிராமியக் குடும்பங்களின் மாதாந்த வருமானம் 400.'.- ரூபாவிற்கும் குறைவாகக் காணப்படுகின்றது.
- 44 சதவீதமான குடும்பங்கள் 200.'.- ரூபாவிற்கும் குறைவான மாத வருமானத்தை மட்டுமே பெற்று வருகின்றன.
- தோழில் அற்றோரில் 70 சதவீதத்தினர் விவசாயிகளாகக் காணப்படுகின்றனர்.

இவையெல்லாம் எவ்வாறு நிகழ்ந்தன? சகல அரசாங்கங்களதும் அபிவிருத்தித் திட்டங்களில் காணி முக்கிய இடம் பெற்றிருந்த போதிலும் காணியின்மை, கிராமிய வறுமை, வேலையின்மை ஆகிய பிரச்சினைகள் மோசமடைந்துள்ளன என்பனையே இத் தரவுகள் கட்டுகின்றன. இத் தரவுகள் - தகவல்கள் எமக்குப் புலப்படுத்தும் உண்மை என்னவெனில், அரசாங்கத்தினால் பல்வேறுபட்ட பெயர்களில் நடைமுறைப்படுத்தப்பட்ட குடியேற்றத் திட்டங்கள் தமது அபிவிருத்தி நோக்கங்களை அடையத் தவறி விட்டன என்பதேயாகும். இந்நிலையில் தொடர்ந்து பதவிக்கு வருதம் எந்த வொரு அரசாங்கமும், குடியேற்றத் திட்டங்கள் தொடர்பான கொள்கையினை நடைமுறையினை மாற்றாமல் 1935 ஆம் ஆண்டிலிருந்து இன்று வரை ஒரே மாதிரியாகப் பின்பற்றியமைக்குக் காரணம் என்ன? அவ்வாறாயின் அரசாங்கம் தமது குடியேற்றத் திட்டங்கள் மூலம் வேறு ஏதாவது வெளிப்படுத்தாத – வெளிப்படுத்த முடியாத நோக்கங்களில், வெற்றியடைந்துள்ளதா? இலங்கை அரசாங்கத்தினால் நடைமுறைப் படுத்தப்பட்ட பாரிய குடியேற்றத்திட்டங்களில் நடைமுறைப்படுத்தப்பட்ட பாரிய குடியேற்றத்திட்டங்களில் 340 மில்லியன் ரூபா செலவிடப்பட்டது (1956 ஆம் ஆண்டு வரை) என, 1959 ஆம் ஆண்டு காணி ஆணைக்குழு கணிப்பிட்டது. ஆனால் அரசாங்கத்திற்குக் கிடைத்த வருமானம் 25 மில்லியன் ரூபா மட்டுமேயாகும், எனவே இக்குடியேற்றத்திட்டங்கள் பொருளாதார ரீதியில் பெருமளவு தோல்வியே கண்டுள்ளன. அவ்வாறாயின் 1935 ஆம் ஆண்டிலிருந்து இன்று வரையில் கடந்த அரை நூற்றாண்டுக்கும் மேலான காலப்பகுதியில், கல்லோயாத் திட்டம் வரை வடக்கு, கிழக்குப் பிரதேசங்களில் மேற்கொள்ளப்பட்டு வந்த பல்வேறுபட்ட குடியேற்றத்திட்டங்களினால் நிறைவெற்றப்பட்டது என்ன? இப் பெறுமதி வாய்ந்த வினாவிற்கு விடை காண்பதே, இக் கட்டுரையின் நோக்கமாகும்.

### வடக்குக் கிழக்குப் பிரதேசம் ஓர் அறிமுகம்

ஆய்ப்புக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட வடக்கு, கிழக்கு பிரதேசங்கள் என்பது இலங்கைத் தீவின் வட பகுதியிலும் கிழக்குப் பகுதியிலும் பரந்துள்ளன. இவ் வடக்கு கிழக்குப் பிரதேசங்களின் மொத்த நிலப் பரப்பு 18,323 சதுர கிலோ மீற்றராகும். இவ்வடக்கு, கிழக்குப் பிரதேசங்களில் உள்ள பெரிய உள்நாட்டு நீர்ப பரப்பு 558 சதுர கிலோ மீற்றராகும், எனவே வடக்கு, கிழக்குப் பிரதேசங்களில் மொத்தப் பரப்பளவு 18, 831 சதுர கிலோ மீற்றர் ஆகும். இது இலங்கைத் தீவின் மொத்தப் பரப்பளவில் 28.8 சதவீதமாகும். இப்பிரதேசம் முழுவதும் வரண்ட வலயமாகவே கருதப்படுகின்றது. இவ் வடக்கு, கிழக்குப் பிரதேசங்கள் நிர்வாக ரீதியாக 8 மாவட்டங்களைக் கொண்டுள்ளன.

- வட மாகாணம்
  - (அ) யாழ்ப்பாணம்
  - (ஆ) கிளிநொச்சி
  - (இ) வவுனியா
  - (ஈ) மன்னார்
  - (உ) முல்லைத்தீவு

2. கிழக்கு மாகாணம்
   - (அ) மட்டக்களப்பு
   - (ஆ) அம்பாறை
   - (இ) திருகோணமலை

1881 ஆம் ஆண்டுக் குடிசன

தொடர்ச்சி அடுத்தவாரம்....

# என்னை கொல்ல முயற்சி:
## சதிமுயற்சி விவகாரம் தொடர்பில் கைதான இந்தியர் நீதிமன்றில்
### பகிரங்க குற்றச்சாட்டு



என்னை நான்கு முறை கொலை செய்ய முயற்சித்த இந்திய ஆட்சியாளர்களுக்காக இலங்கை சி.ஐ.டி. என்னை கொலை செய்ய முயற்சிக்கின்றது. என்னை அவர்களுடன் அனுப்ப வேண்டாம். நான் ஒரு

அப்பாவி என்னை உணவில் விஷம் கலந்து கொலை செய்ய முயற்சிக்கின்றனர். இது குறித்து நான் எழுதித் தருகின்றேன். எனக்கு எழுதுவதற்கு பேனையும், கடதாசியும் தாருங்கள். என ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேன, முன்னாள் பாதுகாப்பு செயலர் கோத்தபாய ராஜபக்ஷ ஆகியோரை கொலை செய்ய சதித் திட்டம் தீட்டப்பட்டதாக கூறப்படும் சம்பவம் குறித்த விசாரணைகளில் சந்தேகத்தின் அடிப்படையில் கைது செய்யப்பட்டு, பயங்கரவாத தடை சட்டத்தின் கீழ் தடுத்து வைக்கப்பட்டு விசாரணை செய்யப்பட்டுவரும் மேர்சலி தோமஸ் எனும் இந்தியர் கோட்டை நீதிவான் நீதிமன்றில் பிரதிவாதி கூண்டில் இருந்து நேற்று முன்தினம் அறிவித்தார்.

குறித்த சந்தேக நபர் கோட்டை நீதிவான் லங்கா ஜயரத்னவின் உத்தரவுக்கு அமைய தடுப்புக் காவல் விசாரணைக் குறித்த மேற்பார்வைக்காக நீதிமன்றில் ஆஜர் செய்யப்பட்ட போதே இதனை தெரிவித்தார். நேற்றைய தினம் இந்த வழக்கு விசாரணைகள் முடிவடையும் தருவாயில், அவரை தடுப்புக் காவல் உத்தரவுக்கு அமைய மீண்டும் சி.ஐ.டி.யினரின் பொறுப்பில் அனுப்பி வைக்க நீதிவான் நடவடிக்கை எடுக்க முற்பட்ட போதே, பிரதிவாதி கூண்டில் இருந்து கையை உயர்த்தி, ஆங்கில மொழியில் இதனை அவர் திறந்த மன்றில் அறிவித்தார்.

இதனையடுத்து உடனடியாக நீதிவான் லங்கா ஜயரத்ன சந்தேக நபரான இந்தியரால் முன்வைக்கப்பட்ட கோரிக்கையை ஏற்று, அவருக்கு எழுத்து மூலம் அவரது கருத்துக்களை தெரிவிக்க அனுமதியளித்து, சிறைச்சாலை அதிகாரிகளின் கட்டுப்பாட்டில் கடதாசியும், பேனையும் வழங்க அனுமதித்தார்.1979 ஆம் ஆண்டின் 48 ஆம் இலக்க பயங்கரவாத தடைச் சட்டத்தின் 5 ஆவது அத்தியாயத்துக்கு அமைவாக பயங்கரவாத சதி ஒன்று தொடர்பில் தகவல்களை வெளிப்படுத்தாமை தொடர்பில் சந்தேகத்தின் அடிப்படையில் இந்தியரான மேர்சலி தோமஸ் மீது விசாரணை நடக்கின்றது.

இதற்காக அவரை மூன்று மாதகால தடுப்புக் காவலில் வைத்து விசாரிக்க பாதுகாப்பு அமைச்சின் அனுமதி பெறப்பட்டுள்ளது. இந்த தடுப்புக் காவல் உத்தரவு எதிர்வரும் டிசம்பர் 22 ஆம் திகதிவரை செலுபடியாகும். பாதுகாப்பு அமைச்சு இதற்கான அனுமதியை ஆஓனு.·. ள்புபு.·. ்வுஆ.·.01.·. 2018 எனும் தடுப்புக் காவல் இலக்க அனுமதியின் கீழ் வழங்கியுள்ளது.

அதன்படி சந்தேக நபரை மேற்பார்வை செய்வதற்காக நேற்று இந்த வழக்கு விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. இதன் போது குற்றப் புலனாய்வுப் பிரிவின் விசாரணை அதிகாரிகளான உதவி பொலிஸ் அத்தியட்சர் இந்திக லொக்குஹெட்டி, பிரதான பொலிஸ் பரிசோதகர் ரஞ்ஜித் முனசிங்க மற்றும் உப பொலிஸ் பரிசோதகர் கே.எம்.எம். குமாரசிங்க ஆகியோர் மன்றில் ஆஜராகினர். சந்தேக நபரும் ஆஜர் செய்யப்பட்டார்.

இதன்போது சந்தேக நபரான மேர்சலி தோமஸ் குறித்த தடுப்புக் காவல் விசாரணைகள் தொடர்பில் உதவி பொலிஸ் அத்தியட்சர் இந்திக லொக்குஹெட்டி மற்றும் பிரதான பொலிஸ் பரிசோதகர் ரஞ்ஜித் முனசிங்க ஆகியோர் நீதிவான் லங்கா ஜயரத்னவுக்கு தெளிவுபடுத்தினர்.சந்தேக நபரான மேர்சலீ தோமஸை உடற் கூற்று மற்றும் மனநல வைத்திய சோதனைகளுக்கு உட்படுத்தியதாகவும், வைத்திய பரிசோதனை அறிக்கை இன்னும் கிடைக்கவில்லை எனவும் அவர்கள் நீதிவானிடம் கூறினர்.கனம் நீதிவான் அவர்களே, சந்தேக நபரை உடற் கூற்று சோதனைகளுக்கு உட்படுத்திய போது, அவரது இடது கையில் முறிவொன்று இருப்பது தெரியவந்தது. அதற்காக அவரை சத்திர சிகிச்சைக்கு உட்படுத்த முயற்சித்த போது, அவர் அதற்கு விருப்பம் தெரிவிக்கவில்லை. மனநல பரிசோதனைகளுக்கு உட்படுத்திய போதும் அதன் அறிக்கை சட்ட வைத்திய அதிகாரி ஊடாகவே மன்றுக்கு கிடைக்கும். எனவே அவ்வறிக்கை இதுவரை கிடைக்கப் பெறவில்லை. அத்துடன் வைத்திய சோதனை ஒன்றுக்காக அவரிடம் இரத்த மாதிரியைப் பெறவும் கோரப்பட்டது. எனினும் அதற்கும் அவர் விருப்பம் தெரிவிக்கவில்லை. அதனால் அதனையும் செய்யவில்லை. இந்த சந்தேக நபர் தொடர்பில் மிக ஆழமான விசாரணைகள் முன்னெடுக்க வேண்டியுள்ளதால் அவரை தொடர்ந்து தடுப்புக் காவலில் வைத்து விசாரிக்கின்றோம் என்றார்.

இதன்போதே தடுப்புக் காவல் விசாரணைகளை தொடர நீதிவான் சந்தேக நபரை அழைத்துச் செல்லுமாறு கூறும் போதே , சந்தேக நபரான மேர்சலி தோமஸ் கூண்டில் இருந்து நீதிவானை நோக்கி அனுமதி பெற்று கருத்து வெளியிட்டார்.என்னை நான்கு முறை கொலை செய்ய முயற்சித்த இந்திய ஆட்சியாளர்களுக்காக இந்த சி.ஐ.டி. என்னை கொலை செய்ய முயற்சிக்கின்றது. என்னை அவர்களுடன் அனுப்ப வேண்டாம். நான் ஒரு அப்பாவி. என்னை உணவில் விஷம் கலந்து கொலை செய்ய முயற்சிக்கின்றனர். இது குறித்து நான் எழுதித் தருகின்றேன் என சந்தேக நபர் கூறிய போது அதற்கு நீதிவான் அனுமதி வழங்கினார்.

இந் நிலையில் தற்காலிகமாக சிறைக் காவலர்கள் பொறுப்பில் எடுக்கப்பட்ட சந்தேக நபர் மேர்சலிக்கு எழுத கடதாசி, பேனை வழங்கப்பட்டது. முற்பகல் 11 மணியளவில் சந்தேக நபர் தனது கருத்துக்களை எழுத ஆரம்பித்தார். பிற்பகல் 12.45 மணிக்கு, அவர் எழுதி முடித்துவிட்டாரா என வினவ நீதிபதி வழக்கை விசாரிக்க எடுத்தார். எனினும் மேலும் எழுத தனக்கு நேரம் வேண்டும் என சந்தேக நபர் கோரினார்.

அதற்கு அனுமதித்த நீதிவான் லங்கா ஜயரத்ன, சி.ஐ.டி.யின் பனிப்பாளர் அல்லது அவர் சார்பிலான பிரதிநிதி ஒருவரை மன்றில் நேரடியாக ஆஜராகுமாறு உத்தரவிட்டார்.

அதன்படி வழக்கு மீளவும் பிற்பகல் 2.30 மனிக்கு விசாரணைக்கு வந்தது. இதன்போது சி.ஐ.டி. சார்பில் விசாரணை அதிகாரிகளுடன் நீதிமன்ற உத்தரவுக்கு அமைய சி.ஐ.டி. பணிப்பாளர் சார்பில் பிரதிப் பனிப்பாளர் பொலிஸ் அத்தியட்சர் பியசேன அம்பாவெல ஆஜரானார். சந்தேக நபர் தனது கைப்பட எழுதிய 20 பக்க விளக்கத்தை நீதிவானுக்கு கையளித்தார்.

அதனை படித்துப் பார்த்த நீதிவான், அதனை பாதுகாப்பாக வைக்க நீதிமன்ற பதிவாளருக்கு உத்தரவிட்டார். அத்துடன் அதன் பிரதி ஒன்றினை சி.ஐ.டி. பிரதிப் பணிப்பாளர் பொலிஸ் அத்தியட்சர் அம்பாவலவிடம் கையளிக்க உத்தரவிட்ட நீதிவான், அதில் உள்ள விடயங்கள் தொடர்பில் அவதானம் செலுத்தவும் அவசியம் ஏற்படுமானால் விசாரணை நடாத்தவும் ஆலோசனை வழங்கினார்.

# 'றோ'விவகாரம் குறித்து ரணில் – மோடி தனிப்பட்ட சந்திப்பில் பேசியிருக்கலாம் அமைச்சர்
## அர்ஜுன ரணதுங்க தகவல்

ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவுக்கு எதிரான சதித் திட்டத்தின் பின்னணியில் "றோ" புலனாய்வு அமைப்பு இருப்பதாக வெளி வந்த தகவல் குறித்து இந்திய பிரதமர் நரேந்திர மோடி யுடன் பிரதமர் ரணில் விக்ரமசிங்க கலந்துரையாடி இருக்கலாம் என தெரிவித்த பெற்றோலிய வளங்கள் அபிவிருத்தி அமைச்சர் அர்ஜுன ரணதுங்க, அமைச்சரவை கோட்பாடுகளை மீறி தகவல்களை கசியவிட்டவர்களுக்கு எதிராக நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் சுட்டிகாட்டினார்.

பெற்றோலிய வளங்கள் அபிவிருத்தி அமைச்சின் அலுவலகத்தில் திங்கட் கிழமை இடம்பெற்ற ஊடகவியலாளர் சந்திப்பின்போது ஊடகவியலாளர்களின் கேள்விகளுக்கு பதிலளிக்கையிலேயே அவர் இதனை குறிப்பிட்டார். அவர் மேலும் குறிப்பிடுகையில் தெரிவித்ததாவது:இந்திய - இலங்கை நல்லுறவை பேணும் வகையில் பிரதமர் ரணில் விக்ரமசிங்க உள்ளிட்ட குழுவினரின் இந்திய விஜயம் அமைந்திருந்ததுடன் இந்திய பிரதமர் நரேந்திர மோடியுடனான சந்திப்பின் போது இலங்கையின் அபிவிருத்தி குறித்து பல்வேறுப்பட்ட கலந்தரையாடல்களும் மேற்கொள்ளப்பட்டன. ஜனாதிபதிக்கு எதிரான கொலை சதித்திட்டத்தில் இந்தியா தொடர்புப்பட்டு உள்ளதாக ஜனாதிபதி குறிப்பிட்டதாகவும் இந்த திட்டத்துடன்"றோ"புலனாய்வு பிரிவுக்கும் தொடர்பு உள்ளதாக வெளியாகிய தகவல்கள் குறித்து இந்திய பிரதமருடனான பொது கலந்துரையாடல்களில் எதுவும் ஆராயப்படவில்லை. இவ்விடம் குறித்து இந்திய பிரதமர் எந்தவொரு கருத்தையும் வெளியிடவில்லை.

ஆனால் ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவுக்கு எதிரான கொலைசதித்திட்டத்தில் இந்தியா தொடர்புப்பட்டுள்ளதாக எழுந்த சர்ச்சைகள் குறித்து பிரதமர் நரேந்திரமோடி மற்றும் பிரதமர் ரணில் விக்ரமசிங்கவுக்குமிடையிலான தனிப்பட்ட சந்திப்புக்களின் போது கலந்துரையாடப்பட்டிருக்கலாம்.

ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேன அமைச்சரவையின் கூட்டத்தின் போது தன்னை கொலை செய்யும் சதித் திட்டத்தில் இந்திய"றோ"புலனாய்வு பிரிவுக்கு தொடர்பு உள்ளது என தெரிவித்ததாக இந்திய பத்திரிகைக்கு அமைச்சரவை அமைச்சர்கள் தகவல்களை கசியவிட்டிருந்தால் அவர்களுக்கு எதிராக நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும் .

அமைச்சர்கள் அமைச்சரவையில் பங்கேற்கும் போது அமைச்சர்களுக்கென தனியான ஒழுக்க விதிமுறைகள் காணப்படுகின்றன. அமைச்சரவையின் உறுப்பினர் என்ற வகையில் அமைச்சரவை ஒழுக்க முறைகளை நான் ஒருபோதும் மீறுவதில்லை. இதேவேளை ஒழுக்க விதிமுறைகளை முறையாக கடைப்பிடிக்க வேண்டியதன் அவசியத்தினை அமைச்சரவை உறுப்பினர்கள் புரிந்து செயற்பட வேண்டும்.

"றோ" அமைப்புடன் அமைச்சரவை அமைச்சர்கள் தொடர்புப்பட்டிருப்பார்களானால் அவர்களுக்கு எதிராக நடவடிக்கைக எடுக்க வேண்டியது அவசியமாகும். அவர்கள் எந்த கட்சியை சார்ந்தவர்களாக இருப்பினும் அவர்களுக்கு எதிராக சட்ட நடவடிக்கைகளும் எடுக்கப்படும் என்றார்.

# உளவாளிகளை உடன் வெளி படுத்துங்கள் விசாரணை வேண்டும்
## என்கிறார் நாமல்.



அமைச்சரவையிலிருக்கின்ற ஒற்றர்கள் யார் என்பதை அமைச்சர் மஹிந்த அமரவீர வெளிப்படுத்த வேண்டும். இதற் காக ஒரு விசாரணை நடத்தப்பட வேண்டும் என பாராளுமன்ற உறுப்பினர் நாமல் ராஜபக் ஷ தெரிவித்திருக்கின்றார்.

இது தொடர்பில் அவர் பதிவிட்டுள்ள டுவிட்டர் பதிவில் மேலும் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:"அமைச்சரவையில் றோ அமைப்பைச் சேர்ந்த இரண்டு ஒற்றர்கள் இருப்பதாக அமைச்சர் மஹிந்த அமரவீர தெரிவித்திருக்கின்றார். இது ஒருபாரிய குற்றச்சாட்டாகும். இந்தக் குற்றச்சாட்டானது இந்தியப் புலனாய்வு அமைப்பு தன்னை கொலை செய்ய முயற்சிப்பதாக ஜனாதிபதி தெரிவித்ததாக கூறிய விடயத்தை உறுதிப்படுத்துவதாக இருக்கின்றது.

எனவே இந்த ஒற்றர்கள் யார் என்பதை மஹிந்த அமரவீர வெ ளிப்படுத்த வேண்டும். இதற்காக ஒரு விசாரணை நடத்தப்பட வேண்டும்"" என்று அதில் தெரிவிக்கப்பட்டுள்ளது.




# துவண்டு போகாத தமிழ் மக்களின் நீதிக்கான குரலாய் நிமிர்ந்து நின்ற விக்கேஸ்வரனின் ஐந்தாண்டுக் காலம்.

அறிஞர்களையும், பௌத்த மஹா சங்கத்தினரையும் புரிந்து கொண்டது மட்டுமின்றி “மடியில் கனமுள்ள” தமிழ்த் தலைவர்களின் தமிழின விரோத அரசியலையும் அவர் புரிந்து கொண்டார். “மடியில் கனமுள்ள” என்பது மேற்படி அங்குராற்பண உரையின் போது விக்னேஸ்வரனால் பயன்படுத்தப்பட்ட பதப்பிரயோகமாகும்.

விக்னேஸ்வரன் வகித்த பதவிக்கு இருந்திருக்கக்கூடிய சிறிய அதிகாரத்தைவிட மக்கள் மத்தியில் இருந்த பேராதரவு மிகப் பெரும் அதிகாரமாய் பலமாய் அமைந்தது. ஆதாலற்தான் அவருக்கு எதிராக நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் கொண்டுவர தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் தலைவர்கள் முதலில் முயன்ற போதிலும் பின்பு அதிலிருந்து பின்வாங்க நேர்ந்தது. இங்கு அவர் மாற்றுத் தலைமைக்கான முஷ்டியை உயர்த்தத் தொடங்கியதற்கான பெறுமானத்தை மக்கள் பலத்தின் வாயிலாக உணர்ந்து கொண்டார். இத்தகைய மக்கள் பலத்தை அவர் தேடிக் கொள்ளக்கூடியவாறு அவர் கொள்கை நிலைப்பாட்டை எடுத்தமைதான் அவரின் மிகப் பெரும் சாதனை என்று கூறலாம். எனவே விக்னேஸ்வரனின் ஐந்தாண்டு சாதனைப் பட்டியலில் விலைபோக முடியாத கொள்கைக்கான மேன்மையும், தமிழ் மக்களின் நெஞ்சுரமும் சேர்ந்து வளர்ந்திருப்பதைக் காணலாம். இது அபிவிருத்தி என்று சொல்லப்படுகின்ற தெருக்கள், பாலங்கள், கட்டடங்கள் என்பனவற்றையும்விட மேலானது.

முழு இலங்கையின் அரசியல் தலைவர்களுள் அதிகம் கவனத்திற்குரிய தலைவராய் திரு.விக்னேஸ்வரன் ஆனார். அதாவது ஜனாதிபதி, பிரதமர், எதிர்கட்சித் தலைவர் என்போர்களுக்கு இருக்கக்கூடிய அதிகாரத்தினாலான பலங்களையும் கடந்து கொள்கையின் பேரால் அதிகம் மதிப்பிற்குரியவரானார். இது தமிழ் மக்களின் இலட்சியத்திற்கும், கொள்கைக்கும், நீதிக்கும் கிடைத்த முக்கியத்துவத்தின் வெளிப்பாடாகும்.

விக்னேஸ்வரன் தன் பதவிக்காலத்தில் அபிவிருத்தி செய்யவில்லை என்று தமிழ்த் தேசியக் கூட்டமைப்பினரும், அரச தரப்பினரும் அவர்களுக்கு அனுசரணையான விமர்சகர்களும் கூறுகின்றனர். முதலமைச்சருடன் ஜனாதிபதியும், பிரதமரும், எதிர்க்கட்சித் தலைவரும், தமிழ்த் தேசியக் கூட்டமைப்பினரும் ஒத்துழைத்து இருந்திருந்தால் அதனை அவர் செய்திருக்கக்கூடும். ஆனால் மாறாக இவை அத்தனை பேரும், அரச இயந்திரமும் அவருக்கு முற்றிலும் முட்டுக்கட்டையாகவும், எதிராகவும் செயற்பட்ட நிலையில் அவரால் அபிவிருத்தியை மேற்கொண்டிருக்க முடியாது.

அவர் அரசாங்கத்தின் பௌத்த சிங்கள ஆதிக்கத்திற்கு எதிராக போராடியது மட்டுமன்றி அதைவிடவும் அதிகமாக தமிழ்த் தேசியக் கூட்டமைப்பினருக்கு எதிராகவும் போராட வேண்டிய வரலாற்று நிர்ப்பந்தம் அவருக்கு இருந்தது. இந்த ஐந்தாண்டு காலமும் அந்த வகையில் அவர் முட்டைக்குள் போர்க்குணத்துடன் கருத்தரித்த காலமாய் அமைந்து தற்போது அவர் முட்டைக் கோதை உடைத்துக் கொண்டு வெளியே வந்த குஞ்சாய் காட்சியளிக்கிறார். இந்த முட்டைக்குள் கருத்தரித்த காலந்தான் கடந்த ஐந்தாண்டுகால வரலாற்று வளர்ச்சி விதியாகும். அந்த விதியை ஏற்று கருத்தரித்த காலமாகவும் தமிழ் மக்களின் விடிவிற்கான ஒரு புதிய காலத்தின் தொடக்கமாகவும் இப்போது அதன்வழி காட்சியளிக்கிறார்.

அவர் மேற்கொள்ள வேண்டிய பயணம் மிகவும் கடினமானது. அவர் பதவியில் இருந்த போது இருந்த பலத்தைவிடவும் பதவியில் இல்லாத தற்போதைய விக்னேஸ்வரின் பலம் பெரிது என்பதை அவர் தன் நடைமுறைக்கு ஊடாக கண்டுகொள்ள முடியும் என்பதில் சந்தேகமில்லை. அவர் எவ்வளவிற்கு எவ்வளவு அடித்தட்டு மக்களை நாடிச் செல்கிறாரோ அவ்வளவிற்கு அவ்வளவு அவரின் பலம் அதிகரிக்கும்.

மகாத்மா காந்தி உப்பு சத்தியாக்கிரகத்தை மேற்கொள்ளும் போது அவர் “உப்பை” போராட்டத்திற்கான கருவியாக தெரிவு செய்ததற்கான முழுமுதற் காரணம் உப்புச் சிரட்டை இல்லாத வீடில்லை என்ற அடிப்படையிற்தான். அதாவது உப்பின் பெறுமானம் அரைச்சதமாக இருந்தாலும் அதுதான் அனைத்து அடித்தட்டு மக்களுடனும் தொடர்புள்ள பொருள் என்ற முடிவிற்கு வந்தார். அடித்தள மக்களை தழுவி நிற்பவர்கள் வரலாற்றில் காலத்தால் அழியாத இடத்தை பிடிப்பார்கள்.

விக்கேஸ்வரன் வெறுமனே ஒரு தனியாள் அல்ல என்பதை அவர் தனது ஐந்தாண்டுகால போர்க்குணத்தின் மூலம் நிரூபித்துள்ளார். இப்போது அவர் முதலமைச்சர் என்ற நாற்காலியைவிடவும் பலம்வாய்ந்தவராக உள்ளார். அவ்வாறான ஒருவர் செயல்முறை அரசியலில் ஈடுபடும் பொழுது மக்கள் அவரை தாங்கி நிற்பார்கள். மாகாணசபை தேர்தல் நடக்குமா இல்லையா என்பதெல்லாம் முக்கியமல்ல. அவர் இந்த ஐந்தாண்டில் சேகரித்த நன்னம்பிக்கை எதிர்காலத் தலைமைத்துவத்திற்கான ஒரு பெரும் முதுசம் ஆகும்.

இப்போது அவர் செயற்முறை அரசியலில் ஈடுபடமிடத்து மக்கள் அவர் பின்னால் செல்வார்கள். தலைவர்கள் அழைக்கும் போதெல்லாம் அவர்கள் பின்னால் திரளும் வரலாற்றை தமிழ் மக்கள் எப்போதும் கொண்டுள்ளார்கள். தற்போது இலங்கை அரசின் கபட நாடகங்களையும், அரசுடனான தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் ஒத்தோடும் அரசியலையும் விக்னேஸ்வரன் தன் முதுகெலும்பை நிமிர்த்தியதன் மூலம் அம்பலப்படுத்தியுள்ளார். இவர் தமிழ் மக்களுக்கான நீதியின் குரலாயும், தமிழ் மக்களின் போராட்டத்திற்கான கௌரவத்தின் சின்னமாயும், நீண்ட நெடிய வரலாற்றைக் கொண்ட தமிழ் மக்களினது பண்பாட்டின் குறியீடாயும் அதற்கான போராட்டத்தின் முரசொலியாயும் காணப்படும் நிலையில் அவர் நேரடிப் போராட்டத்தில் ஈடுபடும் போது அதற்கென ஒரு தனிச்சிறப்புமிக்க பரிமாணம் உண்டு.

அதாவது வாளின்றி துப்பாக்கியின்றி, படையின்றி பட்டாளமின்றி தலைமைதாங்க முற்பட்ட காந்தியின் ஊன்றுகோலின் பிடிக்குள் 40 கோடி மக்கள் அடங்க முடிந்ததை வரலாறு நிரூபித்திருக்கிறது. தற்போது தமிழ் மக்களுக்கான அரசியல் களம் சர்வதேச அர்த்தத்திலும், உள்நாட்டு அர்த்தத்திலும் முன்னெப்பொழுதும் இல்லாததைவிட பலமாக உள்ளது. ஒரு வகையில் முதலமைச்சர் பதவியில் அமர்ந்திருந்த ஐந்தாண்டுகளில் விக்னேஸ்வரன் வகித்த பாத்திரம் தமிழ் மக்களின் போராட்டத்திற்கான நியாயத்தையும், அங்கீகாரத்தையும் அதிகம் பலப்படுத்தியுள்ளது. இந்நிலையில் தன் தோளில் இருக்கும் துண்டை உதறியவாறு விக்னேஸ்வரன் வீதியில் அமர முற்பட்டால் மக்கள் கால்பட்டு அந்த வீதியில் பொறிகிளம்பும். இத்தகைய வரலாற்று சூழலை முன்நகர்த்த வேண்டிய பொறுப்பு விக்னேஸ்வரனுக்கு உண்டு.

முள்ளிவாய்க்கால் இனப்படுகொலையின் பின்பு தமிழ் மக்கள் அசந்து ஓய்ந்து போய்விடுவார்கள் என்று எண்ணியோரின் எண்ணங்களுக்கு மாறாக விக்னேஸ்வரனின் நிலைப்பாடு உறைந்துகிடந்த மக்களின் உள்ளங்களை தட்டியெழுப்பியுள்ளது. எதிரிகளுக்கு சவாலையும் அது ஏற்படுத்தியுள்ளது. ஈழத் தமிழ் மக்கள் துவண்டு போகாதவர்கள், சளையா மனம் படைத்தவர்கள் ஆங்கிலத்தில் இதனை persevering people என அழைப்பர். வரலாற்று சூழல்கள் சில மக்கள் கூட்டங்களை இத்தகைய நிலைக்கு உயர்த்துவது வழக்கம்.

அத்தகைய மக்களுக்கு தலைமைதாங்கக்கூடிய ஒருவர்தான் என்பதை விக்னேஸ்வரன் மேலும் நிரூபிப்பதற்கு வரலாறு அவருக்கு இந்த முதுமைக்காலத்தில் ஒரு வாய்ப்பை வழங்கியுள்ளது.

மருத்துவர் லஷ்மன் கூறியது போல ஒரு தமிழ்த் தேசிய இயக்கத்தை முன்னெடுக்க வேண்டுமென்றால் அது அடிமட்ட மக்களை தழுவியதாய் லஷ்மனின் வார்த்தையில் சாதி, பிரதேச, பால் வேறுபாடுகளைக் கடந்த தேசிய இயக்கமாக கலை-இலக்கியம், பண்பாடு ஆகிய அனைத்தையும் தழுவியதாய் அமைவதுடன் இயற்கை மற்றும் காடு, தாவரங்கள், பிராணிகள் என்பனவற்றையும் தழுவிய ஒரு தேசிய சிந்தனைக்கு தலைமை தாங்க வேண்டியதாய் இக்கால கட்டம் அமைந்துள்ளது. மேலும் அனைத்துவகை மேலாதிக்கத்திற்கு எதிராகவும், சர்வதேச நிலைமைகளுக்கு ஈடுகொடுக்கக்கூடிய வகையிலும், தமிழ்த் தேசிய பண்பாட்டு வளர்ச்சிக்காக உழைக்க வேண்டியதற்கான ஒரு பெரிய பொறுப்பை வரலாறு முன்வைத்துள்ளது.

இவை அனைத்திற்குமான கட்டியமாய் விக்னேஸ்வரின் கடந்த ஐந்தாண்டு காலம் அமைந்தது என்று எதிர்காலத்தில் வரலாற்று ஆசிரியர்கள் கூறக்கூடிய அளவிற்கு இனிவருங்காலத்திற்கான அவரின் முன்னெடுப்புக்கள் அமையும் என நம்புவோமாக.

# தமிழ் மருத்துவம்

## அனைத்து நோய்களை நீக்கும் இயற்கை வாழ்வியல் நுட்பங்கள்!



மூலிகைகளின் பெருமைகளை அவர் தம் மனதில் பதிய வைத்தால் அதனை நன்கு உணர்வார்கள். எழுத்து மூலம் மூலிகைகளை மக்கள் மனதில் பதிய வைத்து அவைகள் மூலம் அவரவர்களைக் கொண்டு தீர்வைச் செய்து நோய்களை குணப்படுத்திக் கொள்வது ஒரு கலை, அதையே பெரிதும் விரும்புகிறேன்.

எப்பாடு பட்டாவது சித்தர்கள் தந்த மருத்துவத்தை நிலை நாட்ட வேண்டும் என்று மனதில் உறுதி செய்து கொண்டேன். மூலிகைகளுடன் பழகிய எனது பட்டறிவு, நம் முன்னோர்கள் அற்புதமாய் நமக்குப் படைத்திட்ட, யுகம் யுகமாய் வாழ்ந்து வரும் நல்லதொரு மருத்துவத்தை நம் மக்கள் மேற்கொண்டு பின்பற்ற மறுக்கின்றனரே என்கிற உண்மை.... உணர்ச்சியும், உண்மையும், மூலிகை மேல் நான் கொண்டிருக்கிற தீராத பற்றும் , அறிவும் மோதி ஒரு உருவம் எய்தியது. அந்த உருவம் தான் இந்த முயற்சி. இந்த அரிய மூலிகைகள் மக்களுக்குத் தெரியாத மூலிகைகள் அல்ல. மனிதன் தனது உணவிற்காக தாவர சீவ தாதுப் பொருட்களை உபயோகப் படுத்தி வந்திருக்கிறான். தாவரப் பொருட்களாகிய வேர், பட்டை, இலை,பூ, காய்,பழம் , விதை, இவைகளை தனது உடலை வளர்க்கவும் நோய் வராமல் பாதுகாக்கவும், நோய் வந்தால் அதை நீக்கவும் தனியாகவோ மற்றப் பொருட்களுடன் சேர்த்தோ உபயோகப் படுத்தி வந்திருக்கிறான். சித்த மருத்துவத்தில் மூலிகைகள் பெரும்பங்கு வகிக்கின்றன.முன்னைய காலத்தில் மருந்துச் செடிகள் இருந்தன. மனை மரமாய மருந்து என்கிற பழமொழி புற நானூறு எனும் நூலில் காணப்படும் தொடர். இதனை விளக்கும் இதை - புழக்கடைப் பச்சிலை என்றும் கூறுவார். மூலிகைகளால் பெருபாலான நோய்களைத் தீர்க்கலாம் என்பது நமது சித்த வைத்தியத்தின் முடிவு. பழந் தமிழர் காலமிருந்தே தமிழகத்தில் சிறப்பான நிலையில் இருந்த சித்த மருத்துவம் , காலப்போக்கில் ஆங்கிலேயர் வருகைக்குப் பின், அவர்களின் மருத்துவ முறைக்கு முற்றிலும் மாறிப்போனது. பாரம்பரிய தமிழர் மருத்துவ முறையை மீட்டெடுக்கும் முயற்சியாக , பக்க விளைவுகளில்லாத மூலிகை மருத்துவத்தின் மகத்துவத்தை, உலக மக்கள் அனைவரின் நலனிற்காக அகிலமெங்கும் பரப்புவதே நம் இலட்சியம். உடலில் தோன்றும் நோய் நொடிகளின் காரணங்களை ஆராய்ந்து, கிடைத்தற்கரிய நம் சித்தர் பெரு மக்கள் அருளிய மூலிகைகளை இனம் கண்டு , மருந்துகள் செய்து, உடல் நோய்களை விரைவில் முழுவதுமாக உடலை விட்டு அகல வைக்க முடியும். உலகில் எத்தனை வகை மூலிகைகள் கிடைத்தாலும் அவை நம் பாரம்பரிய மலைகளில் கிடைக்கப் பெறும் உயரிய குணங்கள் கொண்ட சஞ்சீவி மூலிகைகள் போலாவதில்லை.. இதற்கு எத்தனை உதாரணங்கள் வேண்டுமானாலும் சொல்லலாம்.,

அது தான் உலக மக்கள் அனைவரையும் காப்பாற்றக் கிடைத்த மாமருத்துவ குண நலன் கொண்ட அற்புத மூலிகைகள். மூலிகை வழிதனில் எண்ணுவோமேயானால், தாம் பெற்ற மூலிகைகளின் ஆராய்ச்சிப் பலன்களை சுயநலமின்றி, பிற்கால சந்ததியினர் பயனடையும் வகைகளில் ஏடுகளில் எழுதிய சித்த மூலிகை வைத்தியக் குறிப்புகளில் கிடைக்கும் தகவல்கள் ஏராளம். அள்ள அள்ளக் குறையாத, அவர்தம் சித்த வைத்தியக் குறிப்புகளில் பிரதான இடம் பிடிப்பது மனிதனின் தேக ஆரோக்கியம் பற்றிய வைத்திய முறைகள் தான்.

சித்தமருத்துவம் யாரிடமும் இல்லை. அது மக்களிடம் உள்ளது. விழிப்படைந்த மனிதர்களிடம் உள்ளது. அது மீண்டும் உலக மனிதர்களுக்கு பயன்படும் காலம் வந்துவிட்டது என்பதே மறுக்க முடியாத உண்மை,, மூலிகைகளில் நம்பிக்கை வைப்போம்! பக்க விளைவுகள் இல்லா மருத்துவம் காப்போம்! அவர்களிடம் இருந்து கிடைத்த இந்த அரிய பொக்கிஷத்தை உங்களோடு பகிர்வதில் மிக மிக மகிழ்ச்சி அடைகிறேன்.

பொதுவாக நோய் என்பது உடலில் உள்ள உயிர்காக்கும் சத்துக்கள் குறைவதினால் தான் வருகிறது. இந்த விதி, தேய்வு நோய் (எய்ட்ஸ்) முதல் ஜலதோஷம் வரை பொருந்தும்.

சித்த மருத்துவ பரம்பரையில் .

மனிதர்களைத் தாக்கும் 4448 நோய்களை அறிந்து அவற்றை மூலிகைகளைக் கொண்டே குணப்படுத்தும் முறைகளையும் கூறினார்கள். மேலும் நோய்கள் வரும் முன் காக்க இந்த மூலிகைகளின் பயன்களையும் கண்டறிந்தனர். உணவின் மூலம் நோய்கள் தாக்காமல் இருக்கவும் வழி வகையும் செய்தனர்.

இதற்கான பரிகாரங்களும் வாழ்க்கை முறைகளும் பின்பற்றப்படும்போது நோயற்ற வாழ்வினை நாம் எல்லோரும் வாழ முடியும்..

உண்மை உறவை, பாதுகாப்பை, மகிழ்ச்சியை, நிம்மதியை சகமனிதர்கள் மீது இயற்கையின் மீதான அன்பும்,சுய நலமற்ற வாழ்வுமே தர முடியும்.

நம்முடைய சிந்தனை, செயல்கள், சுவாசம், ஓய்வு, உணவு போன்ற பல முக்கிய காரணிகளை நாம் திருத்தி நலம் பெற முடியும்.

உங்கள் உறுப்புகளையும் அதிலுள்ள ஒவ்வொரு கலங்களையும் பாதுகாத்தே நாம் சுகம் பெற வேண்டும். அதை விடுத்து உறுப்புகளை அகற்றுவது என்பது கவலைக்குரிய தீர்வாகும். பூப்பறிக்க கோடரி எடுப்பது போலாகும். அப்படியான நிலைமைகளை உருவாக்காமலும் அப்படியான தீர்வுகளுக்கு உடன்படாமலும் நீங்கள் இருக்கும் நிலைமை மிகவும் அவசியம்.

நாம் உண்கின்ற உணவைச் செமிக்க வைப்பதற்கு இரைப்பை மட்டுமே போதுமானதா? இல்லவே இல்லை.. ஒட்டுமொத்த உடலும் செமிபாட்டுக்கு உதவுகிறது. அது எப்படி?

1) வாயில் அரைக்கப்பட்டு உணவுக்குழாய் மூலமாக இரைப்பையை சேர்கிறது உணவு.

2) உணவின் சக்தியை வாயில் அரைப்பதன் மூலம் பிரித்தெடுக்கிறது மண்ணீரல்.

3) பித்தபை, கல்லீரல் இவற்றிலிருந்து வெளிவரும் அமிலங்கள் செரிமானத்தில் பெரிய உதவி செய்கிறது.

4) சிறு குடலுக்கு வந்த உணவை, அதன் சக்தியைப் பிரித்து பெருங்குடலுக்குத் தள்ளுகிறது சிறு குடல்.

5) தனக்குள் வந்த உணவுச் சக்கையை, மீண்டும் சக்தியைப் பிரித்து, நுரையீரலின் துணையோடு மலப்பைக்குத் தள்ளுகிறது பெருங்குடல்.

6) மண்ணீரல் மூலமும், சிறுகுடல் மூலமும் உறிஞ்சப்பட்ட சக்தியை இரத்தத்தின் மூலம் ஒவ்வொரு அணுவிற்குள்ளும் இதயம் கொண்டு சேர்க்கிறது.

7) சக்தி பிரித்தெடுக்கும் போது கிடைத்த கழிவுகளை மீண்டும் சுழற்சிக்கு உட்படுத்தி சக்தியை எடுத்துக் கொண்டு மிஞ்சியதை சிறுநீராகப் பிரித்து, சிறுநீர்ப்பை மூலம் சிறுநீரகம் அதனை வெளியேற்றுகிறது.

இது செமிபாடு இயக்கத்தின் வெளிப்படையான பகுதி. இப்போது சொல்லுங்கள், இதன்படி செமிபாடு என்பது ஒன்றிரண்டு உறுப்புகளின் தனித்த இயக்கமா? அல்லது ஒட்டுமொத்த உடலின் இணைந்த இயக்கமா?

உடலின் ஒவ்வொரு உள்ளுறுப்புகளை, தனது இயற்கையின் நியதிப்படி ஒன்று சேர்ந்து உடலின் இயக்கத்துக்கு உதவி செய்கிறது,விலை மதிக்க முடியாத உயிரினும் மேலான உங்கள் உறுப்புகளை, வெட்டியெறிந்து புறக்கணிப்பது என்பது மனம் வருந்தத் தக்க செயல் அல்லவா?

தொடர்ந்து வருவேன்..


Premi . S
பாரம்பரிய சித்த வைத்தியர்
(ராஜவைத்தியம்)
Natural Medicine Practitioner (Can)
1647-278-3100

# "தமிழ் மக்கள் கூட்டணி"

## என்ற பெயரில் அரசியல் கட்சியை ஆரம்பிப்பது எதற்காக?

## நல்லூர் கூட்டத்தில் விக்கினேஸ்வரன் விளக்கம்



இறைமையின் அடிப்படையில் எம்மை நாமே ஆளும் சுய நிர்ணய அடிப்படையில் அதிகாரம் பகிரப்பட வேண்டும் என்ற எமது தேர்தல் விஞ்ஞாபனத்தை ஏற்றுக்கொண்டு எம்மை முழுமையாக நம்பி அதற்கு அங்கீகாரத்தை வழங்கியிருந்தனர். அந்த மனோநிலையும் எதிர்பார்ப்பும் எம் மக்களிடையே இன்னமும் கனன்று கொண்டேயிருக்கின்றது என்பதே எனது அவதானிப்பு.

அன்றைய தேர்தல் காலத்தில் இந்த வாக்குறுதிகள் சாத்தியமானவைகளாகத் தெரிந்திருந்த தமிழ் தேசிய கூட்டமைப்பினருக்கு புதிய ஆட்சிமாற்றத்துடன் புதிய பதவிகள், சலுகைகள் வந்துசேர அவை சாத்தியம் அற்றவைகளாக மாறிவிட்டன. நான் முன்னர் குறிப்பிட்டதுபோல நல்லாட்சி அரசாங்கம் ஆக்கிரமிப்பு நடவடிக்கைகளை தொடர்ந்து மேற்கொண்டுவரும் நிலையிலும், அதற்கு முண்டுகொடுத்து இந்த அரசு எமக்கு தீர்வைத் தரும் என்று கூறிவருகின்றனர். தற்போதைய தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் ஒரு நல்லெண்ண நடவடிக்கையாகக் கூட சிங்கள குடியேற்றங்களையும் பௌத்தமயமாக்கலையும் தற்காலிகமாகக் கூட நிறுத்திவைக்க விரும்பாத இந்த அரசாங்கம் எப்படி எமக்கு தீர்வினை வழங்கும் என்று சிந்திக்க முடியாதளவுக்கு பதவிகளும் சலுகைகளும் அவர்களின் கண்களை மறைத்து வருகின்றன.

வராது என்று தெரிந்திருந்தும் வராத ஒரு தீர்வுத்திட்டத்துக்காக "ஒற்றை ஆட்சி" முறையை ஏற்றுக்கொண்டு "இலங்கை ஒரு பௌத்த நாடு" என்பதையும் ஏற்றுக்கொண்டுள்ளார்கள். இவர்கள் இதற்கான மக்கள் ஆணையை எந்தத் தேர்தலில் இருந்து பெற்றுக்கொண்டார்கள் என்பதை தமிழ் தேசிய கூட்டமைப்பினர் விளக்கவேண்டும் அல்லது எதிர்வரும் தேர்தல்களில் இவற்றை மக்கள் முன்பு வைத்து ஆணையைப் பெறவேண்டும். தேர்தல் விஞ்ஞாபனத்தில் ஒரு கூற்று அரசியலில் மறு கூற்று என்றிருப்பது எம் மக்களை ஏமாற்றுவதாகவே முடியும்.

இராணுவம் முற்றுமுழுதாக வட கிழக்கு மாகாணங்களை விட்டு வெளியேற வேண்டும் என்று எமது மக்கள் வலியுறுத்தும்போது தனியார் காணிகளிலிருந்து அவர்கள் வெளியேறினால் அதுவே போதும் என்ற அடிப்படையில் செயற்படுகின்றனர் தற்போதைய தமிழ்த் தேசிய கூட்டமைப்பினர். வட கிழக்கில் இருந்து இராணுவம் முழுமையாக வெளியேற்றப்பட வேண்டும் என்று அரசாங்கத்தையோ அல்லது சர்வதேச சமூகத்தையோ கோர அவர்கள் அஞ்சுகின்றனர். மடியில் கனம் இருப்பதால்த் தான் அவ்வாறு அஞ்சுகின்றனர் போலும்!

இராணுவம் பொதுமக்களின் காணிகளை விடுவிப்பதற்கு எமது மக்களுக்கு என்று ஒதுக்கப்பட்ட சொற்ப மீள்குடியேற்ற நிதியை இராணுவம் வேறிடத்தில் முகாம் அமைப்பதற்குச் செலவாக வழங்கும் விநோதம் இங்குதான் இடம்பெறுகிறது.

எமது மக்கள் வீதிக்கு விரட்டப்பட்டு அவர்களின் காணிகளில் இராணுவம் விவசாயம் செய்வதுடன் அவர்களின் வாழ்வாதாரத்தை சீர்குலைக்கும் வகையில் வியாபாரங்களையும் செய்து வருகின்றது. பொருளாதார முக்கியத்துவம் மிக்க இடங்கள் இனம் காணப்பட்டு தென்னிலங்கை மக்கள் வந்து வர்த்தக நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்கும் மீன்பிடியில் ஈடுபடுவதற்கும் இராணுவம் ஊக்குவிக்கிறது. இராணுவம் முன்னர் இருந்த முன்னரங்க நிலைகள், மினி முகாம்கள் போன்றவற்றில் தாம் வணங்குவதற்கு என்று அமைக்கப்பட்ட புத்தர் சிலைகள், இராணுவம் அந்த இடங்களில் இருந்து வெளியேறிய பின்னரும் அகற்றப்படாமல் விடப்பட்டு பௌத்த விகாரைகளாக மாற்றப்படுகின்றன. இவற்றைப் பற்றி பாராளுமன்றத்தில் பேசி அரசாங்கத்தை சங்கடப்படுத்தக்கூடாது என்றும் தமது பதவிகளுக்கு ஆபத்து வரக்கூடாது என்றுமே எமது தலைவர்கள் நினைக்கின்றனர்.

வலி வடக்கில் சிறிய துண்டு காணிகளை விடுவித்துவிட்டு, முல்லைத்தீவு என்ற ஒரு மாவட்டமே திட்டமிட்ட குடியேற்றங்களால் முற்றிலுமாக விழுங்கப்படுவதை தெரிந்தும் தெரியாததுபோல் உள்ளனர் எமது தற்போதைய தமிழ்த் தேசிய கூட்டமைப்பினர். வடகிழக்கில் தொல்பொருள் திணைக்களம், வன இலாகா, மகாவலி அபிவிருத்தி சபை ஆகியன பூர்வீக தமிழர் வாழ்விடங்களை எல்லாம் ஆக்கிரமிப்பதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கின்றனர் தற்போதைய தமிழ்த் தேசிய கூட்டமைப்பினர்.

காணாமல் போனவர்களின் உறவுகள் வீதிகளில் பல வருடங்களாக போராடி வருகின்றனர். கண்துடைப்பு முயற்சியாக ஏற்படுத்தப்பட்ட காணாமல் ஆக்கப்பட்டவர்களுக்கான அதிகாரமற்ற அலுவலகம் தனது இடைக்கால அறிக்கையை கடந்த செப்ரம்பர் மாதம் ஐ. நா மனிதவுரிமை சபையின் கூட்டத்தொடரை ஒட்டி அவசர அவசரமாக வெளியிட்டுவிட்டு இன்று உறங்கு நிலைக்குச் சென்றுள்ளது. வலிந்து காணாமல் ஆக்கப்பட்டவர்களின் எண்ணிக்கையை வெளி உலகுக்குக் குறைத்து காட்டுவதே இந்த அறிக்கை வெளியிடப்பட்டதன் ஒரே நோக்கமாகும். முறைப்பாடு செய்தோர் மட்டுமே கணக்கில் எடுக்கப்பட்டுள்ளனர். பலர் முறைப்பாடே செய்யவில்லை. பலர் முறைப்பாடே செய்யமுடியாத அளவுக்கு குடும்பத்துடன் காணாமல் ஆக்கப்பட்டுள்ளனர். பலர் உயிருக்கு பயந்து புலம் பெயர்ந்துள்ளார்கள். காணாமல் ஆக்கப்பட்டவர்களுக்காக ஏற்படுத்தப்பட்ட ஆணைக்குழு தனது ஆய்வில் இந்த மட்டுப்படுத்தல்கள் (Limitations) குறித்து எதுவும் குறிப்பிடவில்லை.

மன்னார் ச.தொ. ச வளாக மனிதப் புதைகுழியில் இன்றுவரை குழந்தைகள் உட்பட எடுக்கப்பட்ட மனித எலும்புக் கூடுகளின் எண்ணிக்கை இருநூறை எட்டியுள்ளது. அதேபோல வேறு பல இடங்களிலும் மனித புதை குழிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவற்றைச் சரியான முறையில் முகாமைப்படுத்தி சர்வதேசத்தின் கவனத்திற்கு எடுத்துச் செல்வதற்கு எமது தலைவர்களுக்கு வக்கில்லை. அவர்களால் அதைச் செய்ய முடியாது. ஏன் என்றால் அவர்கள் சலுகைகளுக்கும் சொகுசுகளுக்கும் அடிமைப்பட்டு விட்டார்கள்.

குறைந்த பட்சம் இந்த நல்லாட்சி அரசாங்கத்துக்கு வழங்கும் ஆதரவின் ஊடாக ஒரு நல்லெண்ண நடவடிக்கையாகத் தடுப்பிலுள்ள தமிழ் அரசியல் கைதிகளையாவது விடுவிக்க முடிந்திருக்கின்றதா? அரசியல் சாணக்கியம் பற்றி அடிக்கடி குறிப்பிடும் தமிழ் தேசிய கூட்டமைப்பின் தலைவர்கள், 16 பாராளுமன்ற உறுப்பினர்களை பாராளுமன்றத்தில் வைத்துக்கொண்டு தமிழ் அரசியல் கைதிகளின் விடுதலைக்காக ஏன் இதுவரை எந்தவிதமான காத்திரமான நடவடிக்கைகளையும் எடுக்கவில்லை என்பது எனக்கு புரியவில்லை. ஆகக்குறைந்தது வரவு செலவு திட்டத்தைக் கூட சாதகமாக பயன்படுத்தி கைதிகளின் விடுதலைக்கு முயற்சி செய்யாமல் அரசாங்கத்தின் வரவு செலவு திட்டங்களுக்கு ஆதரவாக தவறாமல் வருடா வருடம் வாக்களித்து வருகின்றார்கள். இவர்களின் மீது நம்பிக்கை இழந்துள்ள நிலையிலேயே அரசியல் கைதிகளின் விடுதலைக்காக எமது பல்கலைக்கழக மாணவர்கள் தமது கற்றல் செயற்பாடுகளையும் இடைநிறுத்தி வீதியில் இறங்கி போராடும் நிலைமை இன்று ஏற்பட்டுள்ளது.

போர்க்குற்ற விசாரணைக்கான சர்வதேச மனித உரிமைகள் சபையின் கோரிக்கையை மேலும் பலப்படுத்தி மேற்கொள்ளப்பட்ட தீர்மானங்களை அமுல்படுத்துவதற்கான காத்திரமான எந்த நடவடிக்கைகளையும் அரசாங்கம் எடுக்கவில்லை. கால இழுத்தடிப்புக்களை மேற்கொள்ளும் அரசாங்கத்தின் நடவடிக்கைகளுக்கு தமிழ் தேசிய கூட்டமைப்பு துணை போகின்றது என்பதுதான் யதார்த்தம்.

ஆகவே, இன்றைய நெருக்கடியானதும் இக்கட்டானதுமான காலகட்டத்தில் தமிழ் மக்களின் நலன்களை மையப்படுத்தி சிந்திக்கும்போது, ஒரு மக்கள் இயக்கத்துக்கு தலைமை தாங்கி செயற்படும் நான்காவது தெரிவு அதிகாரமற்ற ஒரு இயக்கத்தின் வெறும் ஆதங்க வெளிப்பாடாகவே இருக்கும் என்று எனக்கு புரிந்துள்ளது. அதனால்த்தான் தமிழ்த்தேசியக் கூட்டமைப்பின் முக்கியஸ்தர்களில் ஒருவர் மக்கள் இயக்கமொன்றை நான் முன்னெடுத்துச் செல்வதைத் தாம் வரவேற்பதாகக் கூறியுள்ளார்.

எனவேதான் அரசியல் கட்சி ஒன்றை ஆரம்பித்து தமிழ் தேசிய கோட்பாடுகளின்பால் பற்றுறுதியுடன் இருக்கும் அனைவரையும் ஒன்றிணைத்து ஒரு நிறுவனப்படுத்தப்பட்ட செயற்பாட்டை முன்னெடுக்கும் மூன்றாவது தெரிவே சிறந்ததும் அவசியமானதும் என்று உணர்கின்றேன். உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் வாழும் பல தமிழ் புத்திஜீவிகளும் தமிழ்த் தேசிய செயற்பாட்டாளர்களும் இது காலத்தின் அவசியம் என்றும் எனது கடமை என்றும் உணர்த்தியுள்ளதுடன் தமது ஆதரவையும் வெளிப்படுத்தியுள்ளனர். எல்லாவற்றுக்கும் மேலாக, நான் சந்தித்த ஒட்டுமொத்த தமிழ் மக்களும் இந்த கோரிக்கையைத் தான் என்னிடம் விடுத்துவந்திருக்கின்றார்கள். ஆகவே நீங்கள் விரும்பியபடியே எனது அரசியல் பயணம் தொடரும். என்னை நம்பிய எனது மக்களுடன் இறுதிவரை வாழ்ந்து அவர்களுக்காகப் பணி செய்வது என்று முடிவுசெய்துள்ளேன். பதவியில் இருந்து தற்போது தற்காலிகமாக ஒதுங்கியிருப்பது எனது உடல் நிலையை வெகுவாக சீர்செய்யும் என்று எதர்பார்க்கின்றேன்.

வடமாகாண முதலமைச்சராக இருந்த காரணத்தினால் வரையறைகளுக்கு அமைவாக எனது செயற்பாடுகள் வட மாகாணத்துக்குள்ளாகவே மட்டுப்படுத்தப்பட்டிருந்தன. கிழக்கு மாகாண மக்களுக்கு எந்த உதவிகளையும் என்னால் செய்யமுடியவில்லை. உரிமைகளுக்கான எமது போராட்டத்துக்கு கிழக்கு மாகாணத் தமிழ் மக்கள் செய்துள்ள தியாகம் மற்றும் காத்திரமான வகிபாகம் ஆகியவற்றை நான் அறிவேன். அவர்கள் இன்று சொல்லொண்ணா துன்பங்களை அனுபவித்து வருவதையும் நான் அறிவேன். அங்குள்ள சமூக தலைவர்கள், செயற்பட்டாளர்கள் மற்றும் பொதுமக்களுடன் இணைந்துதான் உருவாக்கவிருக்கும் புதிய அரசியல் கட்சியின் ஊடாகப் பணியாற்றுவதற்கு நான் உறுதி பூண்டுள்ளேன்.

தமிழ் மக்கள் பேரவையின் அனுசரணையுடன் ஒரு அரசியல் கட்சியை உருவாக்கும் நடவடிக்கைகளை நான் ஏற்கனவே ஆரம்பித்துவிட்டேன். தமிழ்த் தேசிய கோட்பாடுகளின் வழிநின்று எமது இனத்தின் அரசியல், சமூக மற்றும் பொருளாதார விடுதலையை வென்றெடுத்து மேன்மையை அடைவதற்கு, மனித உரிமைகளை மதித்து நேர்மையுடனும் அர்ப்பணிப்புடனும் பணியாற்றும் அனைவரையும் ஒரு குடையின் கீழ் சேர்க்க, இந்தக் கட்சிப் பயணம் உறுதுணையாக அமையும். இதற்கு "தமிழ் மக்கள் கூட்டணி" (Thamizh Makkal Kootanii – TMK) என்ற காரணப் பெயரை இட்டுள்ளேன்.

என் அன்புக்குரிய மக்களே! இது எனது கட்சி அல்ல. இது உங்களின் கட்சி. நீங்கள் வளர்க்கப்போகும் கட்சி. காலத்தின் அவசியத்தால் உதயமாகும் கட்சி. தமிழ்த் தேசியக் கூட்டமைப்பினர் தமது கொள்கைகளுக்கு விஸ்வாசமாக இதுகாறும் நடந்திருந்தார்களேயானால் நான் ஓய்வு பெறப் போயிருப்பேன். ஒரு கட்சியை உருவாக்க என்னை கட்டாயப்படுத்தி விட்டார்கள் கூட்டமைப்பினர்! தமிழ் தேசிய கூட்டமைப்பை எந்த விதத்திலும் கூறு போட நான் விரும்பவில்லை. எனது குறிக்கோள்கள் சரி என்றால் மக்கள் என் பக்கம் சார்வார்கள். இல்லையேல் என்னை ஒதுக்கி விடுவார்கள். அது மக்களின் விருப்பம்.

எமது மக்களின் அரசியல், சமூக பொருளாதார மற்றும் கலாசார விடுதலைகளுக்கான "மக்கள் அரசியலை" முன்னெடுக்கும் பொருட்டாக சில செயற்திட்ட முன்மொழிவுகளை இந்த சந்தர்ப்பதில் இறுதியாக முன்வைக்க விரும்புகின்றேன். இவை மேலும்

35ம் பக்கம் பார்க்க

# "தமிழ் மக்கள் கூட்டணி"

## என்ற பெயரில் அரசியல் கட்சியை ஆரம்பிப்பது எதற்காக? நல்லூர் கூட்டத்தில் விக்கினேஸ்வரன் விளக்கம்

ஆய்வுக்குட்படுத்தப்படவேண்டும், விவாதத்துக்கு உட்படுத்தப்படவேண்டும், உபாயங்கள் வகுக்கப்படவேண்டும். அவையாவன -

1. கடந்த காலங்களில் இடம்பெற்ற கசப்பான சம்பவங்கள், முன் கோபதாபங்கள் , குரோதங்கள் , விரோதங்கள் எல்லாவற்றையும் களைந்துவிட்டு தமிழ் தேசிய கோட்பாடுகளுக்கு அமைவாக இணைந்த வடக்கு கிழக்கில் பகிரப்பட்ட இறையாண்மை அடிப்படையில் சமஷ்டி தீர்வு ஒன்றைக் காணும் எனது அரசியல் பயணத்தில் கைகோர்க்குமாறு அகத்திலும் புலத்திலும் உள்ள அனைவரையும் அழைத்து அரவணைத்து செயற்பட வேண்டும்.

2. இணைந்த வடக்கு கிழக்கில் சமஷ்டி அடிப்படையிலான தீர்வினை அக்கறையுடனும் இதய சுத்தியுடனும் பரிசீலிக்கும் எந்த அரசுடனும் பேச்சுவார்த்தையில் கலந்துகொண்டு தீர்வை அடையப் பாடுபட வேண்டும்.

3. அரசாங்கத்துடன் தடைப்பட்டுப் போயுள்ள இனப்பிரச்சினைக்கான பேச்சுவார்த்தைகளை மீள ஆர்ம்பிக்கும் பொருட்டு உள்நாட்டிலும் சர்வதேச சமுகத்தின் ஊடாகவும் அழுத்தம் கொடுக்கும் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

4. இனப்பிரச்சினைக்கான தீர்வுக்கு குறுக்கு வழிகளை கையாளாமல் போர் குற்ற விசாரணைகள் மூலம் உண்மைகளை எமது சிங்களச் சகோதர்களுக்கு தெரியப்படுத்தி பரஸ்பர அவநம்பிக்கைகள் மற்றும் அச்சங்களை நீக்கி நிலையான சமாதானம் ஏற்பட சகல வழிகளிலும் பாடுபடுபட வேண்டும். இதற்காக சிங்கள புத்திஜீவிகள் , மனித உரிமைகள் செயற்பாட்டாளர்கள், சமூக மற்றும் மதத் தலைவர்கள் மற்றும் ஊடகங்களுடன் நெருக்கமாக செயற்பட வேண்டும்.

5. நிறுவனப்படுத்தப்பட்ட செயற்பாட்டின் மூலம் தனிப்பட்ட கட்சி நலன்களைப் புறந் தள்ளி மூலோபாய திட்டமிடலுடனான செயற்திட்டங்களை முன்னெடுத்துச் செல்ல வேண்டும்.

6. அரசியலையும் அபிவிருத்தியையும் சம அளவில் சமாந்திரமாக கொண்டுசெல்லும் நிறுவன மயப்படுத்தப்பட்ட செயற்பாடுகளை ஏற்படுத்த வேண்டும்.

7. போரினால் பாதிக்கப்பட்ட மக்களுக்காக புலம்பெயர் மக்கள், அரச சார்பற்ற நிறுவனங்கள் மற்றும் உலக நாடுகளின் உதவியுடன் சுயசார்பு பொருளாதார நடவடிக்கைகளை ஏற்படுத்தி மீண்டும் அவர்களுக்கு வளமான ஒரு வாழ்க்கையை ஏற்படுத்தும் பொருத்தமான ஒரு பொறிமுறையை ஏற்படுத்த வேண்டும்.

8. அரசியல் கைதிகள், காணமல் போனவர்கள் மற்றும் மக்களின் காணிவிடுவிப்பு போன்றவற்றுக்கு சர்வதேச சமூகம் மற்றும் ஐக்கிய நாடுகள் சபை ஆகியவற்றின் உதவிகளுடனும் அரசாங்கத்துடனான தொடர்ச்சியான கலந்துரையாடல்கள் மூலமும் தீர்வு காணும் நடவடிக்கைகளை மேலெடுக்க வேண்டும்.

9. இறுதி யுத்தத்தில் நடைபெற்றது இன அழிப்புத் தான் என்று வட மாகாண சபையில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தை வலுப்படுத்த, மேலும் ஆய்வுகளைச் செய்தும் தரவுகளைத் திரட்டியும் சர்வதேச ரீதியாக அதனை ஏற்றுக்கொள்ளச்செய்தல் வேண்டும். இதற்குக் காலம் கனிந்து வருகின்றது என்பதே என் கருத்து.

10. உலகம் முழுவதிலும் வாழ்கின்ற தமிழ் மக்களுடன் நெருக்கமான உறவை ஏற்படுத்தி எமக்கு அரசியல் ரீதியாகவும் பொருளாதார ரீதியாகவும் பலமான ஒரு ஆதரவு சக்தியை உருவாக்க வேண்டும். எமது இனத்தின் இருப்பை உறுதிசெய்யும் எமது நியாயமான இந்த சுய பாதுகாப்பு போராட்டத்துக்கு புலம்பெயர் தமிழ் மக்கள் முக்கியமாக தமிழ் நாட்டில் வாழுகின்ற கோடிக்கணக்கான எமது மலேசியா, சிங்கப்பூர், மொரீசியஸ் மற்றும் தென் ஆபிரிக்கா ஆகிய நாடுகளில் வாழ்கின்ற தமிழ்மக்களும், அமெரிக்கா, பிரித்தானியா, ஐரோப்பா, அவுஸ்திரேலியா, கனடா போன்ற அபிவிருத்தி அடைந்த நாடுகளில் வாழும் எம் தமிழ் மக்களும், சேர்ந்து அரசியல், பொருளாதார, சமூக மற்றும் கலாசார ரீதியான ஒத்துழைப்பையும் ஆதரவையும் எமக்கு வழங்கவேண்டும் என்று இந்த சந்தர்ப்பதில் வேண்டுகோள் விடுக்கின்றேன்.



மக்கள் தந்த ஆணைதான் எனது மனசாட்சியாக இதுவரை இருந்துவந்துள்ளது. அவர்கள் அளித்த வாக்குகள் தான் என் சக்தி. நம்பிக்கையுடன் வாக்களித்த மக்களுக்கு நேரடியாகவோ மறைமுகமாகவோ என்னால் துரோகம் செய்ய முடியாது. இதனை என் பலம் என்பர் சிலர். சிலர் பலவீனம் என்பர். இது பலமா பலவீனமா என்பதை வரலாறு தீர்மானிக்கட்டும். ஒருபோதும் மக்கள் எனக்கு அளிக்கும் ஆணைக்கு விரோதமாக நடக்கமாட்டேன். மக்களின் ஆணைக்கு விரோதமாக நடந்துவிட்டு அதற்கு சாணக்கியம் என்றும் ராஜதந்திரம் என்றும் முகமூடிகளை அணிந்துகொள்ளமாட்டேன். எமது இனத்தின் வரலாறு எனக்கு வழிகாட்டும்.

எனதினிய தமிழ் மக்களே! அகவை எண்பதில் இன்று காலடி எடுத்து வைக்கும் இந்த வயோதிபனை உங்கள் சேவகனாக்க முன்வாருங்கள். புதிதாக உதயமாகும் உங்கள் கட்சியைக் கையாள கனதத எம் மக்கள் ஒன்று திரள வேண்டும். இன்றுடன் அரசாங்கம் எனக்களித்த அதிகாரங்கள், சலுகைகள், சார்பான அனுசரணைகள் யாவும் அரசாங்கத்தால் திரும்பப் பெறப்படுவன. இப்பொழுது நான் உங்கள் வீட்டுப் பிள்ளை. என்னை உரியவாறு உருவாக்குவது உங்கள் பொறுப்பு! என்னை வளர்த்த தமிழ் மக்கள் பேரவைக்கு என் மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்து விடைபெறுகின்றேன்.

